தேசுறுஞ்சுயம்பு லிங்கமிங்குள வேற்றீர்த்தமுந்தெய்விகத்
துறையு, மாசறச்சோதிப்பேனென நினையவடர்ந்தெழுஞ்சேனை
யுந்தொடர்ந்து, வாசவனிணையாஞ்சேர்ந்தனரவர்க்கிம்மகிமைசெற்
றத்தடமருங்கை, நேசமோடெங்குஞ்சோதியுமென்னநின்றவர்
கண்டதிசயித்தார். 20

இந்திரனெனிற்கண்ணுடற்கெலாமில்லையிவனங்கந்தங்க
மாயிருந்த, கந்திருமேவார்கட்கரசனேவியக்கக்கடவுளோரெனக்
கவலுற்றுச், சந்திரவெளுப்போற்றெறந்திருவரசன்சார்ந்தனன்ற
னைநிகருருவச், சுந்தராகண்டாற்சொல்லுகநின்சொற்சோற்வு
றுதியற்றுவமென்றார். 21

எமதரசிவனேவாய்வெளுப்பொன்றுமிருந்ததெத்தெய்விக
நடந்தோ, வமைவுரவறிவோமென்றவர்நிற்பவரசனுநகைத்தவர்
பெயரை, நமர்களேயென்ன வழைத்தவனடைந்தநலன்சொலநய
ந்தெழுந்தாடி, யுமையொருபாகற்காண்கவென்றெங்குமோடினார்
தேடினருவந்தார். 22

நாற்றிசைக்கெழுந்ததூற்றினைக் கடிந்துநாடுறுங்காலைகீழ்த்
திசையிற், போற்றுமீசானமடையவாங்கொருவன்போக்குமண்
வெட்டி தாக்குறலு, மேற்றுயர்கொடியெம்பிறையிலிங்கத்தினெ
ழுந்திடும்பஞ்சவண்ணத்தின், றேற்றியசோதிச்சுடரினைக்கண்
டோன்சொற்றலுமழவனுங்குற்றான். 23

உழுவலன்புடையமழவனுக்கெதிரேயொருபெருஞ்சுயம்பு
வாயுடையா, னழகுறுமக்கமணியுருவாகிவடக்குருப்பதாகையி
னமர்ந்து, விழைவுறமற்றைமுப்புறஞ்சடமாய்விளங்கொளியிலிங்
கத்தைக்கண்டான், றொழுதனனெழுதான்முழுதுமுய்ந்தாடித்து
தித்தனன்பணிந்தனன்றுதிப்பான். 24

சுந்தரச்சோதிச்சுயம்புவேசரணந்துரியமாப்பிரமமேசரண,
மந்தவுட்சத்திமானெனச்சுருதியறைந்திடநிறைந்தவாசரண,மிந்
துவிண்ணிரவியெழிலழனயனத்திறையவாசரணமெக்காலுநந்தி
னைத்தவெஞ்சங்கைசங்கரையினடத்தொளிவிடங்கனேசரணம்

ஞானமாமுருவநாதனைசரணநவிலுமவ்வியத்தனைசரணம்,
வானமாமுருவவானவாசரணம்வளரொளித்தாரகத்துருவ, மான
வாசரணமகரமொடுகரமகரமாய்விந்துவாய்நாதத், தானமாந்தேசு
விடங்கனைசரணஞ்சம்புவேசுயம்புவேசரணம். 26

என்னையாண்டவனிங்கிருப்பனென்றுன்னியிறைஞ்சிடவெ
ணணியான்றேட, முன்னவாவருமைத்திருவுருவதனின்மூண்டி
டும்பாவமுற்றியதால், கன்னியாம்பெண்டின்கருவுறுதன்மைதின்
மையாங்காரணம்போன்றேன், மன்னுமெய்யிறைவாபிழைத்தன
னெனவேமயங்கினன்வாடினன்வீழ்ந்தான். 27

அழைத்துவாழ்வித்தானவனுளத்தன்புமுயற்சியுங்கண்ட
ருள்புரிவான், பிழைத்ததுநமக்கிங்கில்லைநீபிழைத்தாய்பெட்பினை
ம்பூசனைப்பேற்றாற், குழைத்திடுமனதுதியினன்மகிழ்ந்தேதாங்
கொற்றவாசற்றுநீகுன்றேல், தழைத்திடுஞ்சுயம்புத்தலமிதுசால
பாவமுஞ்சாருமுன்றடியும் 28

சாற்றுமிவ்வுலகத்தேற்றியதலங்கள்சார்ந்துசெய்தவந்தரு
மங்க, ளாற்றுமித்தலத்தினூற்றிலொன்றாகாதருளொடுஞ்சுயம்
புவாயன்பின், வீற்றிருந்தருள்வோமித்தலத்தென்றுமேவினோர்
க்கிகபரவிதிப்போம், போற்றுமித்தெய்வச்சிவகங்கைக்கரைக்
கேழ்முனிவருந்தவம்புரிந்தடைந்தார். 29

அம்புயமடந்தைநம்பெருந்தீர்த்தத்தாழ்மேயபரியினையடை
ந்தாள், உம்பர்மாமுனிவர்கருடர்கந்திருவருரகர்மானிடரெனவில்
லோர், நம்பியேநமதுதீர்த்தநீராடிநம்மையுஞ்செம்மையிற்கண்டு
வெம்புநோய்பாவம்விட்டவரிட்டமேவினர்பூமியன்னவனே. 30

அருட்சிவகங்கைக்கரையினிற்றருமமனந்தமாமத்தடத்தீ
ரத், திருக்கொடியாகமியற்றிடிலனேகயாகபுண்ணியமுறுமிமை
யோ, ருருக்கொடுசிவலோகத்தினுமுறைவரிருப்பொருள்கொடுத்
திடற்றினர்க்கு, மருட்கொடுமந்தப்பலனுறுஞ்சைவமார்சிவகங்
கைசின்மயமே. 31

காசியிற்கங்கையமுனைசொல்வாணிகலப்பினிலிறப்பவர்
முத்தி, யாசறவடைவாரருட்டிருவாரூரகத்தினிற்பிறப்புறின்மு
த்தி, வீசியசீர்த்தித்திருமயிலாடுதுறையினிலியன்றவஞ்செய்யி,
னோசைசேர்முத்தித்திருத்தவத்துரையினொருதினமுறைந் திடி
ன்முத்தி. 32

களைபடிச்சிறுகானெறிசெவிமறிபான்கன்றுநின்கண்முன
ங்காட்டி, யுமையினம்பூசைப்பலத்தினாலன்னையுந்திடவிங்களை
ப்பித்தோம், நவமணிவராகநமதுமாமாயைநாடுறக்காட்டிநந்தீர்
த்தத், தவமெலாமகலவாட்டிவித்தனம்வாயதாமுள்ளடக்கலால
கலா. 33

அந்தவாய்வெருப்புமகன்றிடமிந்தவணிநகர்புதுப்பித்தங்க
மர்வாய், சந்தமாரிந்தவாபாரமுற்றுந்தண்ணிழற்கவிகையுட்ப
டுத்தி,நந்திருவருளானுலகெலாம்புரப்பாயென்றருள்புரிந்தனனா
தன், முந்தைவாய்வெருப்புமொழியுமுன்னொழிந்தமுன்புவீழ்
ந்தன்பினாற்றொழுதான் 34

எந்தையாரருளைவியந்தெழுந்திமையோரிறைஞ்சிடுஞ்சிவ க
ங்கைக்கிசையச், சந்தமார்படிகநவமணியதனாற்றாபிதஞ்செய்தி
றைகோவிற்,சிந்தையார்மதிலுஞ்சிவபுரமென்னச்செழுமணிபொ
ன்னினார்செறிவித், தந்திவாயுச்சிகாலையிற்சேவித்தஞ்செழுத்
தோதியாங்கமர்ந்தான். 35

எண்ணிமேய்முன்னர்திரேதவாந்தத்திலிறந்திடுமிடநகரா
க்கி,விண்ணுலாவுறையுந்தானங்களைத்துவீதிகளாதியாய்வி
திப்பப், பண்ணுலாமறையோரரசர்கள்வணிகர்பின்னவர்பல்குடி
மல்கித், தண்ணிலாமாடங்கூடமாடங்கள்தழைத்துமுன்வளத்தி
னோங்கியதால். 36

வேறு

பொன்னினீர்வளைமுழக்கொடுங்கால்நடைபோகிக்,
கன்னல்வாழைபைங்கமுகுதெங்கெங்கணுங்கலந்து,
சென்னெலோங்கியசெவ்விகணிறைதரத்தேக்கி,
யன்னமாரலரம்புயத்தடக்கடலடையும். 37

மாழைமாமலர்ச்செருந்திபுன்னைகமாதவிபூந்,
தாழைதாதகிகோங்குமந்தாரைசண்பகநீள்,
கோழரைச்செழுங்குங்குமஞ்சந்தனங்குலவும்,
பேழைநேர்கனிபலவுசூழ்ந்தழகொடும்பிறங்கும். 38

வேறு

சுற்றுபூங்கழனித்துழனியாலெழுந்துதுள்ளிய வாளைமீன்
றெங்கி,னெற்றினையுதிர்த்துக்கமுகெழும்பாளைநிறையினிற்சிதறி
மாங்கனியை, யெற்றினீள்பலவின்குடக்கனியிடறியிடைப்பழு
முதிர்த்தரம்பையினிற், செற்றுபூங்கரும்பைச்செறுத்துமஞ்சளு
ட்போய்ச்செந்நெலிற்புகுந்துநீர்செறியும். 39

வேறு

மாதவிப்பந்தரின்மஞ்ஞையாடவே,
தாதிவராளிகள்சங்கீதம்பாடுமாற்,
போதலற்கொன்றைபொற்போதுபோடவே,
நாதனூர்த்தடத்துக்கண்ணளினமாடுமால். 40

பாசடையிடையினிற்பதுமம்பூத்தன,
வாசவனுருவினைவயங்கக்காட்டுமாற்,
மேறொளிமாடத்துச்சிகரச்செம்மணி,
யாசறுமுதயமேலருக்கர்போலுமால். 41

அந்தணரவிப்புகையண்டர்க்குண்டியை,
வந்ததென்றவன்பொழில்மங்குல்போலுமாற்,
கந்தரந்தவழ்வகைமாறதாயும்பர்,
வந்திடமழையினையுய்த்தன்மாளுமே. 42

வேறு

சாதிமாலதிவலம்புரிதளவுசண்பகம்வெண்,
போதலர்ந்தயந்தாரைகூவிளம்புன்னைசாளஞ்,
சீதமார்வெட்டிவேர்மருக்கொழுந்துசெங்கழுநீ,
ராதிபோனடையார்ந்தனவனங்கொங்கெங்கும், 43

நீலநெய்தல்செங்குவளைகணிலவிப்போடை,
மாலைசென்றடைவண்டினர்புண்டரீகத்தின்,
காலைசென்றிசைபடித்தலர்நடும்பகற்போதிற்,
கோலவார்குழற்றங்கெமின்னுரிசைகொள்ளும். 44

குயிலினமயிலினங்குமுறுவண்டினம்,
பயிலுறுகிளியினம்பருதிப்புள்ளினம்,
வயமுறுதென்றல்பூமகரந்தங்கெழீஇ
யியலுறுஞ்சோலைகளிடங்களெங்குமே. 45

சந்தக்கந்தமுந்தார்குழற்கந்தமுநுக்க,
னுந்தக்கந்தமுமோமத்தின்கந்தமுமாவேர்,
கொந்துதார்மலர்க்கந்தமுஞ்சுகந்தமாய்க்குழுமி,
வந்தெக்கந்தமுந்திகாந்தமுமுகாந்தமுமணக்கும். 46

கழனியின்றுழனியுங்காமர்பொன்னகர்,
விழவினின்றுழனியும்வேதபாரகர்,
தழனியந்தவிதருந்துழனியுந்தழீ,
மழையினின்றுழனியைமாற்றிவீறுமால். 47

வீதிநான்கினுமேனிலைக்கொடிகள்தோரணங்க,
ணீதியந்தணர்சுருதிசொற்றெற்றியினிரைகள்,
போதின்மங்கையும்வாணியுங்காணியாய்ப்பொலிவார்,
சோதி பூசையைவிழவினைச்சொல்லுவாரெவரே. 48

வானநாயகன்மணிநெடுங்கோபுரக்கொடியி,
னூனமேலுறுகண்டாசையுற்றைந்தருநீழற்,
றூனமேவுமைந்தேனுவுந்தனித்தனிவந்து,
மேனியாவையுநாவினானக்கிபேவியக்கும். 49

சோலையெங்கணுந்தோகைகள்துகிர்கொள்கூட்டன்னஞ்,
சாலையெங்கணுந்தோகையர்தருமகூட்டன்ன,
மாலையெங்கணுமோடுவதடுங்கரும்பிரதங்,
காலையெங்கணுமோடுவகடவுளிரதம். 50

மாகத்தோங்குநெற்போரலால்வஞ்சர்போரில்லை,
மேகத்தேபொழிபயமலால்விளைபயமில்லை,
யீகைத்தாருவினிலையலாலிலையெனவில்லை,
நாகத்தார்புகழ்மழவநாட்டெந்தநாளும். 51

வேதநிதியமிகுநகரெனவிளம்புவதென்,
ஓதிவேதமேவேழ்முனிவரரமர்தலமென்றாற்,
சீதநீர்வளஞ்செப்புவதோசிவகங்கை,
யேதநீங்கவன்னகரிடத்துதித்துளதென்றால்." 52

திருப்பொலிந்திடுநகரெனல்வேண்டுமோதிருவை,
யுருப்பொலிந்தமாலுற்றவண்பெற்றனனென்றால்,
விருப்பினின்னகர்வேந்தனும்மழவன்வாழ்ந்திருந்தான்
பெருத்தசீர்த்திருமணாளன்றாணீழலும்பெற்றான். 53

(4. மழவராசன் வெண்குட்டம் நீக்கிய வத்தியாயம் முற்றும்.)
ஆகச்செய்யுள். (214)

---

## (அஞ்சாவது வயிரவிவனமென வகுத்த வத்தியாயம்.)

முழவந்தழங்கக்கரடதடமூரிப்பகடேர்ந்துலகளிக்கு, மழ
வன்புகழுமராசசிகாமணியின்சரிதமகதியிசைக், கிழவன்கிளர்த்
துமிக்கதைதனைக்கேட்போர்வையங்காப்பரென, விழையுந்தவத்
தோர்தவத்துறையைவியந்தார்புகழ்ந்தார்விளம்புவார். 1

சுருதிச்சுரும்பர் சூழ்ந்திசைப்பத்தோட்டுக் கமலவீட்டக
த்துப்,பருதிக்குழுவொத்தாசிருந்துபடைக்கும் பிரமன்பாலகே
ன,தருதிக்குலகம் போற்றுதிருத்தமைக்குஞ் செல்வத்தவத்து
றையைக், கருதிப்புகழுங்கதைகேட்பான்கனிந்ததின்னுங்கருத்
தெமக்கே. 2

பொன்னஞ்சுடர்ச்சூளிகைமாடம்புனையுங்கொடிகள்மிடை
ந்தழகாற், றுன்னுஞ்செல்வத்திருவீதிசூழும்பெருமைத்தவத்து
றைக்கு, முன்னப்புகன்றாய்வயிரவிமாவனமென்றதுவென்மொ
ழிகென்ன,' நன்னெஞ்சுடையீர்கேண்மினெனநவில்வானிசைசூர்
நாரதனே. 3

கணிப்பிற்றவப்பேறுரிமைப்பிற்காட்டும்பெருமைக்கலியுகத்திற், றணிப்பிலாதிதனிற்காளிதன்னேரில்லாவயிரவியாங், குணிப்பில்சனைவயிரரக்கர்க்கோன்றேவென்றிப்பெயர்கொண்டாள், மணிப்பொற்கபாலமாலிகையோர்கோடிதரித்துவயங்குறுவாள், 4

அழல்கான்றொளிருங்கொடுஞ்சூலமங்கைக்கேந்தியட்டல்சொல்வாள், மழுவாளசுரரெதிர்ந்தவரைவாளைக்கொண்டுவயங்கொண்டாள்; பிழையாதடரும்வாட்கரத்தாள்பிரசண்டத்தாண்டவம்புரிவாள், பழியாவசுரரமரர்களைப்பயப்பாட்டொடுங்கப்பார்த்திடுவாள்.

வேறு

தன்னொடுநடனஞ்செய்பவரின்றிச்சதுர்த்தசபுவனமும்போகி, மன்னிமென்னோதுன்னிதட்கமலவாணிநாயகன்வதிந்துறையும், பொன்னனைபுகுந்துசுருதிமேயமுதலாம்போதகவாதியாடிடநீ, பென்னொடுவருகத்தோற்றவர்விடுகவின்றனவினிநடமென்றாள். 6

ஆங்கதற்கிசைந்தேபாரணக்கிழவனுயிர்த்தேவாண்டாடப், பூங்கழற்காளிவென்றிடவெட்கிப்புகலுவானான்முகப்புத்தேள், தாங்கரிதுன்னோடாடவெமக்குத்தனையனாம்பரதமாமுனிவ, னீங்குருநடனநிருபனோடாடில்நினைதுவெற்றியென்றுரைத்தான். 7

அம்மொழிகேட்டுக்கொம்மெனநகைத்தாளாங்கதன்றூடுவாணுன்னி, யிம்மெனப்பாதநூல்கள்கண்டியற்றோனிணையிலாநடனர்பாலேகிச், செம்மபனோடுந்தந்தைசொற்புகலச்செவிப்புலனேற்றனன்றந்தை, யம்மவோதோற்கையறமதன்றென்றுவாடினனவளொடுநெடுநாள். 8

உக்கிறகாளிமிக்கதாண்டவத்தாவோய்விடாதாடலும்பரத, னெக்கினனிடைந்தான்வெட்கினன்சொல்வானிலகியவயிரவிநின்னோ, டொக்கநாட்டியஞ்செய்பவரிவணில்லையோங்கொளியாகிரீங்கரிய, செக்கர்மாமேனிமுக்கணுபகனோசெயங்கொளுஞ்செல்லுகவென்றான். 9

என்றலுநகைத்தேவயிரவியேகியெதிர்ப்பவரினியிலையென்றே, சென்றனள்சங்கைசென்னிமேற்கொண்டதேவர்கடேவன்பாற்சென்று, மன்றினுளாடுமலர்ப்பதமவணங்கிமதியணிமவுலிமாதேவ, கொன்றையஞ்சடிலக்கூத்தினுக்கெல்லொங்கோவெனக் கூறுவார்கின்னை. 10

என்னொடுபொடிற்பெயர்நமக்காகுமென்றுரையாடினளிவடன், புன்மையாங்காரப்பொய்மைமைநோக்கிப்புராதனனைத்திடபாகத், தன்னைப்பார்த்தான்வயிரவிசெயலையடக்குவானாகியேயமலன், மன்னுமுன்மத்தனிருத்தமொன்றறியோம்நின்னொடுமொடில்வந்திடுமே 11

ஆதலாலாடல்தருநமக்கென்றனவனையுமண்டங்களைத்துஞ், சீதராஞ்சிதேவர்கடமையுக்கிரிந்திடவனுதினமாட்டும்,பூதநாயகனல்வேதநாயகனப்போதுடனெழுந்தனன்போற்றி, நாதநாதாந்தசெயசெயவென்றேநாண்மலர்வானவரிரைத்தார். 12

உலகினைப்பெற்றவுமையம்மைதாளமொலித்திடவுணரூர்ந்திடுவோ, னிலமெலாநடுங்கத்தன்னுலைமுழக்கநிகரிலாமுனிவர்கண்களிப்ப, நலனுறுமிகுசோடியையவுமிருபானண்ணினின்றேத்திடச்சாம, மிலகுபின்பிசையாலேத்திடநடனமெடுத்தனனம்மையாளுடையான். 13

காளியுநடனங்கோலினளெங்குங்கறங்கெனச்சுழன்றனகருது, நீளுறமுகரமண்டலிநடனஞ்செய்தாள்பாரிசநேர்ந்தாள், தாளுறும்பிரமரிகைநடந்தந்தாள்சக்கராகாரமுநடித்து, வாளுறும்ராசமண்டலிபிரமரிசக்கராதியநடம்வகுத்தே 14

வேறு

தபூதலாடவிமுதலியபேரெறனத்தயங்க,
நபூதமின்நடமென்றுநாடினர்மிகநடித்தாள்,
விபூதியாடியமெய்ப்பொருளப்பலநடன,
வபூதமாமெனநடித்தனளுயிரம்விதமாய். 15

வேறு

திரியச்சுதாளந்தேவியெடுப்பக்கரபிச்ச,
முரிமைச்சாத்துவதிடமாமன்னுமையம்மை,
யருமைச்சிங்கநாதத்தாளமணைவேபோடக்,
கருமக்கவுசிகரீதிநடித்தான்கைலாயன். 16

இமையநாயகியாள்கானபல்லவமெடுத்திசைப்ப,
நமையுமட்கொள்வான்சுவித்தமோநாடகநடித்தா,
னமைவுறுப்பாரிணீமுகஞ்சிங்கியேமுதலாந்,
தமையடர்த்திடுநாடகமனந்தங்கள் தழைப்ப. 17

வேதநாதங்கள்கீதங்கள்மிகுந்தெழுவின்னோர்,
பூதராதியோர்முனிவரர்புடைமிடைந்தேத்த
வாதினையகிகண்டிடவினைத்தையுமாட்டு,
நாதனடினைக்காளியுநடுநடுங்குறவே. 18

சதுதாளமற்றிதுநடமுதனடவிறுதி,
நீதியாவருமறிகிலார்மயங்கினர்நேரே,
வாதிநாடியவயிரவியறிகிலாள்மயக்கப்,
போதநாயகனார்த்ததாண்டவம்புரிகின்றான். 19

அருள்சுரந்தண்டகூடத்தக்கப்புறம்போகி,
முருகியங்கியமுண்டகமுழுமலர்ப்பாத,
மிருளகன்றிடவெங்கணுமெடுத்தனனடனங்,
கரியகாளியுமெடுத்திடநினைத்தலுங்கண்டே. 20

ஆண்டநாயகியவைதகாவிதனைதகைத்திடலும்,
பூண்டுகொண்டதன்னுணாமாங்காரம்பொன்றியதாற்
றாண்டவன்முகநோக்குறாள்தன்றலைவணக்காள்.
சேண்டயங்குமேவார்யாவருஞ்செயசெயவென்றார். 21

கருணைநாயகனுண்டனைபூட்டிடக்காளி
மருளுமுள்ளமோடழுங்கினளழுதனள்மயங்கி,
யருளுநாயகன்யாவையுமாட்டுநின்னடனந்,
தெருளிலாதநான்கண்டிடவெத்தவஞ்செய்தேன் 22

தெள்ளுநீர்வளங்கொள் திருத்தவத்துறையைச்செவ்விதின் வலங்கொடுசேர்ந்து, வள்ளியோர்பரவுஞ்சிவகங்கைபாடி வண்டிருநீறணிந்தன்பாற், கொள்ளைமாதவத்தோர்குழ்பிடுந்தெய்வக் கோவிலுட்புகுந்தனையாகத், துள்ளுமான்மழுக்கைச்சோதியைக்கண்டான் துதித்தனன்பணிந்தனன்தொழுதாள். 29

வேதமாகமத்தின்விதிப்படிபூசைவிமலனுக்காற்றியே முன்னின், றாதிநாயகனையழைத்துவாழ்வித்தவையனைப்பெருந்திருவாளா, சீதவானமதியச்சேகரதேசுவிடங்கனே திருத்தவத்துறையென், றோதனைப்பன்றுநாற்றழும்பேறமேவத்தினுள் வயிரவிகயந்தே. 30

என்னுறுப்பாவயிரிந்ததூநீயுமித்தலத்திருந்துகாத்திடுவாய், புண்ணியதலமீதென்றருள்புரியப்புராதனன்றபாதலம்போற்று, நண்ணியேயிருந்தானந்தமாகரம்வயிரவிவனமெனநவின்றார், கண்ணினுலவனைக்கண்டுபோற்றினர்கள் கடும்பசைவிடக்கதியடைவார். 31

சங்கரன்செல்வத்தவத்துறைநாதன் வயிரவிக்கருள்புரிசரிதம், மெங்கிருந்தோர்களாகிலுங்கேட்கில்விடர்விடுபகைகெடுங்காவற், சங்கிலிபூண்டோராங்கவைபோக்கித்ததுச்செல்வகளமடைகுவரென்றான், பொங்குநட்கதையபால்வல்வினையகற்றும்புனிதனுநாரதமுனிவன். 32

(5-வது வயிரவிவனமென வகுத்த வத்தியாயம் முற்றும்.)

ஆக விருத்தம் 149

---

## ஆறுவது திருக்கல்யாண வத்தியாயம்.

காற்றிசைபோற்றும்மேற்றிசைமகதிநாரதனவிவ்வனங்கேட்ப, போற்றிசைமுனிவர்மறுத்தெதிர்புகழ்ந்துபுகலுவாசகமெலாம் புகழுந், தாற்றினப்பூத்தாற்றெழுங்கயல்கடாவுறுந்திருத்தவத் துறையிற், றேற்றருங்கிணைப்போற்றினிலுவந்தோதாஞ்செப்பும்விண்ணப்பமொன்றுளதால். 1

திருவளருருவத்தொருபெருந்தேவைச்சிவன்றிருத்தவத்துறைப்பெருமான், அருளொடும்வேட்டதன்பொடுங்கேட்பானுரைசெயுற்றனமெமக்கைய, விருவினைத்தொடர்புங்கருமலச்செயலுமிரிந்திடமுருந்திளநகையாண், மருவிடத்துருவத்தொருமுதற்கண்பும்வாய்த்திடவருள்கெனவகுப்பான். 2

தெளிதருஞானத்திரட்சியோவொருவன்சிவதருமத்தினதுருவோ, களிதருமமுதமொருவழிதிரண்டகாட்சியோவெனக்கவின்சிறந்தங், கெளியரேமருளென்றிமையவர்முனிவரின்னிசையாளர்கிஞ்சையர்கள், தளையறச்சூழ்ந்துதாழ்ந்துவாழ்த்தெடுப்பத்தழைத்திடுங்கயிலையாஞ்சயிலம். 3

சந்திரர்கோடியங்கொருமலைபாய்த்தாங்கிரண்டன்னதச்சசிக, ஞந்திபவமுததாரைகளொழுக்கொத்தொலிதரும்வானதியருவி, வந்தடிக்கமலவாவிகள்பாயவானமுதின்றுமோர்காலஞ், சிந்துவின்விடத்தாற்சிந்திவந்தனரேற்றேவருண்பதற்கெனத்திகழும். 4

ஆயிரங்கோடிஞாயிறொத்திலங்குமளிர்மணியாலயமதன்கண், சேயொளிச்சிந்தாமணியினாற்றிகழுந்திருவரசிருக்கைமண்டபத்தின், மீயுயர்விதானநவமணிச்சரமுமிகுமளித்தருமலர்த்தொடையும், பாயொளிமணமுந்திசைதொறும்பரப்புமதினைடுப்பாந்துயர்ந்தொளிரும். 5

ஆளரிமடங்கல்சூழுறச்சுமந்தவரியணைப்பெரியவாசனத்தில், வேளினையெரித்துநீடருள்சுரந்தோனமின்னருளொடும்வீற்றிருந்தான, நாளிணைப்பரவிநாரணன்முதலோர்சயசயபோற்றியென்றிசைப்ப, வானுறத்தருவின்றேமலர்பொழிந்துவானவர்மாதவர்வணங்க. 6

தும்புருவொடுநாற்சுருதியிற்பாடச்சுருதிகள்கருதினின்றேத்தப், பப்புசாமரைகளிருபுரத்திரட்டப்பாடகமாடகச்சிலம்பா, ரம்பொன்னூர்சாரணத்தரம்பையர்நடிப்பவருங்கணநாதர்கள்வணங்க, நம்பினுக்கருணந்தியெம்பெருமானுதனாதாந்தவென்றேத்த. 7

இப்படித்தென்னைச்செப்புதற்கரிதாயிருந்திருவோலக்கத்தி
னைய, னைப்படிகண்ணுறுநெடுகரிருக்குமைபணிகண்டன்மா
தேவ, னொப்பரிதாயபாரதியினிலையாமொளிமணியாடியுட்டோ
ன்றச், செப்பரிதாயவுமைமெய்யம்பார்த்தான்றினகரற்குள் ளு
றைசெயல்போல். 8

எதிருறநோக்கவாடியுட்சாயையிடப்புறம்வலப்புறமாகப்,
புதிதுறுமதனையுமையம்மைகாணுபுராணர்க்குவலப்புறமாக,
மதிதருதனதுசாயையெஞ்ஞான்றுமகிணைவேரவலத்தினிலொருத்திச்,
சதுரியாயிருக்கத்தாபிதஞ்செய்தீர்சப்புவுந்தூர்த்தராயினீரே. 9

அத்தனாரீசரெனும்பெயருமக்கேனணிமணிக்கண்டத்தில்
விடமுஞ், சுத்தமாமதுரவாசகச்செயலின்சூட்சியுங்கண்டனனெ
ன்னைச், சத்திதாங்கரிபவாடல்கொண்டிடலுஞ்சங்கரனங்கைபற்
கண்ணைப், பத்திபாய்ந்ததுதான்வலமிடமெதிரிற்பரிந்துநீபார்த்
தெதிர்பகர்வாய். 10

வேதநாடரியவாலையாதலினால்மேனையோடிமைப்பீன்றெடு
த்த, பேதையாயிங்தப்பேதமுற்றனைநாமமிழைபுரிந்தோமலநோ,
மாதிபாரணமுமறைந்திடுமுன்னையன்றிநாமொருவரையணையோ
ம், பாதியாநமதுமேனியேயென்றுபரிந்துகந்தாங்கழீக்குனிந்தா
ன். 11

சூட்டுடைபெகினமோட்டுவெள்ளனநடர்ந்தினனுங்கா
ணுறச்சோதி, காட்டுறுமனந்தமரிபிரமாதியண்டங்களழிந்து
மோர்திவசங், காட்டுறுதமலவணிமதிக்கீற்றுட்கண்டனள்றன்
றிருச்சாயை, கோட்டுபுன்முறுவல்கொண்டுமைதனதுகொழுந
னைக்குறித்திவைமொழிவாள். 12

நிலைமையாய்வலத்தினிருப்பவடன்னைநீரொளித்தன்றுநீ
ரொளித்த, நலனுறுமவுலிதலையினிலமைத்தீர்நன்றுநன்றெமது
நாயகரே, யலகிலாதெவைக்குமீச்சுரர்கருத்தாவாண்டவரிப்படி
க்கமைத்தீர், இலகுவாணுதலாளேழையெவ்வேறெயிச்செய்திசெய்தீ
ரெனற்றேம்பி. 13

பிரிவுறாவுமையாடன் கலையாகப்பின்னுமோராருக்கொடுகை
லை, யரியநாயகனும்பெருந்தகைவேட்பவரும்பெயர்பெருந்திரு
வென்றே, யுரியகாமத்தோடுவந்துபோக்கிடலுமொருவனுங்கங்
கைசற்றுதுத்து, விரவிமேயநடப்பவேட்டிடக்கைலைவெற்பெனுந்
தவத்துறைக்குற்றான். 14

நறியநீர்க்கங்கைநானிலங்கொளாமறையகனருள்விநாயகீன்
றன், பிறைநிசர்கோட்டாற்குத்திப்பாதலந்திற்பெயர்ந்திடவிடு
த்ததும்பொர்க்கல, னெறியினிற்புகூந்துகங்கைவாகனமாய்நி
மலையுங்கலைமதியணிந்த, மறியுறுகரத்தோனுளத்தொடுபோந்து
வந்ததோர்குழவியாய் மயங்க. 15

ஒள்ளொளியுவந்துவெள்ளைநீறணிந்தவுரோமசன்பராபர
ன்சடிலத், தென்றூவாய்சங்கையாநிலாய்சுயம்புக்கேத்திரத்
தேதவஞ்செய்தான், மன்னலாருளால்மாதொடுங்கங்கைவந்தவ
ணெழுந்ததுவைபங், கொள்ளைவான்றவஞ்செய்துவெனவமரர்
குணலையிட்டனர்மலர்சொரிப்ப. 17

எனச்சொலுமுனிவன்றனைச்சவுனகர்பார்த்திகதிசயமெ
ன்விசைப்பார், தனக்குவமில்லானறிருக்கலியாணஞ்சாற்றென
வேறொன்றுமொழிந்தா, டனைத்துநின்முகத்தாற்கேட்டிடவேண்
டுமாமுனியக்கண்மேவியதெவ, சினத்தினைச்சினந்தமுனிவர
வென்னச்செப்புவானெப்பிலாமுனிவன். 17

தருமமோருருவெடுத்தெனவிளங்குஞ்சவமாமுனியு
ரோமசனு, மொருபகுதிரைஞ்ஞாறுவேதாநாளையந்திடலொரு
புறங்கையின், மருவியவுரோமமொன்றுதுபந்தமாமுனிசுயம்புக்
கேத்திரத்தி, னரியதாங்கங்கைவரத்தவம்புரிந்தானளவினுளங்
கவனிடத்தே. 18

வேறு

மகிழ்வினோடுபொங்கலியர்வந்தனர்,
தகைமையரோமசன்சரணந்தாழ்ந்தனர்
புகழுமாமுனிபோந்துறத்தமழ்.
மிகழ்விலாசனமிட்டிருந்தனர். 19

அன்பினால்விருந்தாற்றியாசகன்,
றின்புளீர்கொலோயிங்குவந்ததென்
றன்புநீர்விடச்சொல்லுவீரென,
முன்பிருந்தவன்பொழிதன்மேயினான்.



உய்ந்திடத்தவமுனாற்றுமுத்தம,
சந்திமுற்றநின்றயவில்வாழ்ந்தனன்,
பந்தமற்றநின்பாதம்பற்றினேன்,
சிந்தையுற்றனைச்செப்பக்கேட்டியால். 21

மழலைமென்மொழிமைந்தரின்றியே,
பழையவல்வினைபற்றினந்தனன்,
பொழியுநின்னருட்புதல்வனையமொரு,
அழகுபுத்திரியருளவேண்டுமால். 22

அரியகன்னிகாதானமாயினும்,
புரியவேண்டிப்புத்திரர்களில்லையே,
உரியசோடசத்தானத்துள்ளினும்,
பெரியகன்னிகாதானமேசிலே. 23

கோட்டுக்கோவினங்கொடுக்குந்தானமும்,
வேட்டுவேள்விசெய்திடலுமென்மையாம்,
பூட்டிப்பூணொடிப்பூவையைக்கொடுத்,
தீட்டும்புண்ணியமெவைக்குமேலதாம். 24

உமைபடைத்தனனுமையைப்போலவே,
சமனில்கற்புடைத்தனையைப்பெற்றுளான்,
சிமயவெற்பினிற்சிவனைமேவரித்,
திமையினல்கிடவேண்டுமெந்தையே. 25

என்றமாங்கலற்கிசையியம்புவா,
னன்றியித்தலஞ்சித்திரக்கிடு,
மொன்றியிங்குறைகெனவுறைந்தனன்,
கொன்றைசூடியைக்குறித்தங்குட்கொடே. 26

ஏயர்நீங்கிவரிருந்தகாலையில்,
யாயர்வாரெனயாவும்வல்லவர்,
ராயர்நான்மறைகங்கையாடிடச்,
சேயரோமசர்ச்சேர்ந்துதாழ்ந்தனர். 27

வேறு

சார்ந்தவர்க்குத்தருவனதான்செய்து,
வோர்ந்துவந்ததுரையெனவோதுவா,
ஞார்ந்தஞானத்தமர்கலைத்துறோர்,
வார்ந்தகங்கைபடிதல்வழுக்கதே. 28

பாணிறத்தனம்பாலைப்பருகியே,
கோலநீரவரைந்திடுங்கொள்கைபோற்,
சூலபாணிதுரியத்திற்றேய்வுறீ,
மால்மயக்கமறுத்திடல்ஞானமே. 29

வானில்வந்தபதியணிநாயகன்,
றானுவந்துதரித்தருள்கங்கையில்,
மோனமோடெழும்நல்வன்றேகுவேன்,
ஞானமீதெனநாசியிற்கைவைத்தான். 30

வைத்தரோமசமாமுனிகூறுவா,
னித்தலத்தினிலேவருங்கங்கைநீர்,
சித்தியித்தலத்தாகுஞ்சிவதலத்
துத்தமத்தலமிங்குதவுறில். 31

பாவநாசஞ்செயும்பணிக்கங்கைதான்.
தேவதேவனருளினிற்சேர்ந்திடுந்,
தாவிலாதுறையென்னத்தவஞ்செய்தா,
ராவராகிமொழிந்தஞ்செழுத்துமே. 32

வேறு

அனைத்திலுந்தாக்காதுறைந்திடுமமலனருமுனிவோர்தவமுணர்ந்து, நினைத்ததனுக்கரியவிருமைச்சத்திகளையுந்தன்றிருவடிகேயந், இனைத்துணைநீங்காவுரோமசர்வணங்கத்தெக்கணமூர்த்தமாய்ச்செலுத்தப், புனத்தினிற்பாதிபிலத்தினிற்போகவதியெனப்புக்கதையன்றே. 33

மேல்வரும்புனிதக்கங்கைவாகனமாய்மேவம்மைசுயம்பு கே
த்திரத்தின், மூலமாயமர்ந்தமுக்கணன்முன்வந்தெழுதலுமுழு
மலர்தூர்த்தார், பாலலோசனனைப்பரவியேயிமையோர்பாடினர்
வேதமாகமங்கள், ஞாலமெத்தவஞ்செய்ததுவெனச்சுவர்க்கநா
டியேதுதித்ததையன்றே. 34

சுருதிரோமசருமாங்கலமுனியும்பாயருந்துதித்தெழுந்தா
டிப், பருதியைக்கண்டவுலகெனக்களித்துப்பனிமலர்தூர்த்துவீ
ழ்ந்திறைஞ்சி, யுருகுபொன்னிறத்துமுருகலர்க்கொன்றையுறும
ணங்கமழ்ந்தகங்கையிலே, யரகரகரவென்றாடினார்கங்கையக த்
தெழுகுழவியைக்கண்டார். 35

தினகரானந்தவொளியொடுமென்னைசேர்ந்தனள்திருமதிய
னந்த, மனவொளிபரப்பிக்கங்கையுமடைந்தாளந்தமாவிமையமி
ன்னைகரென, முனிவர்யாவரும்பாருமேற்றியிறைஞ்சிடக்கண்
டிம்மூவர்களும், பனிவரையுமையைப்பனிமலர்தூவிப் பணிந்த
னர் பதமலர்வழுத்தி. 36

பானல்வாய்மதலைப்பச்சிளங்குழவிபார்வதிபோலுமாங்கல
ரே, ஞானநாயகனைநோக்கியிவ்வனத்துநண்ணியதவப்பலத்தா
லே, தானமூவுலகத்தாயவதரித்தாள்சந்திரமௌலியேயணக்கு,
மீனநீங்கியதாலெடுத்துநீர்வளர்க்கிலெனத்தொழுதுரோமசனெ
டுத்தான். 37

பற்றறுத்துயர்ந்தரோமசனெடுத்துமாங்கலர்பாணியிலுய்ப்ப,
நற்றுபாற்குழவியுலகன்னையென்றேநாடியேசிரந்தொழவேந்திச்,
சுற்றுமாச்சிரமச்சூழலின்முல்லைச்சுரிகுழற்றேவிகைக்கொடுப்ப,
மற்றவடானுமளவிலாமகிட்சிவைத்தனள் தொழுதனள் வளர்த்
தாள் 38

மாயையைக்கடந்தயாபவர்தாமும்வளரொளியுரோமசர்தா
மும், தூயநீர்க்கங்கைதோய்ந்தளவில்லாச்சித்தியுமுத்தியுந்துய்
த்தார், நேயமாங்கலரத்தீர்த்ததீரத்தினிறைமலர்நந்தனவனம்
வைத், தாயதீர்த்தத்தின்படிகளுங்கட்டியனுதினமாடிபேயமர்ந்
தார். 39

அழகியதீர்த்தநிருதிபாகத்திலருமுனிவோர்களாச்சிரமங்
கெழுமமாங்கலருமதனைவொக்கிளருமாச்சிரமத்திலமர்ந்தே
மழவுறுதழுவிவளர்மதியெனவம்மாங்கலர்தவமெனவளர்ந்தாள்,
முழுமதிமுகத்தாட்கெவ்வனம்வருதல்முக்கணனோக்கியேமு
யன்றான். 40

அந்தநற்காலஞ்சத்தமாமுனிவரடைந்தவண்டவஞ்செயவ
வற்கு, வந்தருள்புரிந்துவயங்குமக்காலமலர்கொய்வான்சிவகங்
கைமருங்கே, நந்தனவனமக்குளத்தினிலன்னைநான்மறைக்கன்
னியரோடுஞ், சந்தனாடவிசூழ்வேலியுட்புகுந்துதருக்கொடுநீர்ம
லரெடுத்தே. 41

புதுமலரனைத்துமதுமலர்க்குழலிற்பொருந்திடவணிந்து
டன்களைந்து, பதுமபாசடையிற்பொதிந்துவைத்தங்ஙன்பான்
மொழியாருடனேகு, மிதுதினநடப்பவம்மலரெடுப்போரிறைவர்
க்குத்தினந்தொறுமிந்த, விதமலரனைத்துநந்தனவனத்தார்வியந்
தெடுத்தமைத்ததென்றெடுத்தே. 42

பொதிந்தவம்மலரைக்கைக்கொடுபோகிப்புராதனர்க்கணிவ
ரின்புறமே, பதிந்தனுதினமுமற்றொருநான்றுபங்கயத்திருவடி
சேப்ப, வதிர்ந்தொலிசிலம்புதண்டைகளலம்பவருமறைக்கன்னி
யரோடு, மெதிர்ந்துவந்தன்னைமலர்வனம்புகுந்தாளிணர்மலரெடு
ப்பவர்காண. 43

நறவுகொப்பளிக்குமுகிழ்வெடிப்பருவநாண்மலர்கொய்வது
ந்தரித்துப், பிறைநுதல்கழித்துப்பொதிந்தவண்வைக்கும்பெற்றி
யுமுற்றவுங்கண்டா, ரறைகுவாரந்தோவரியநம்பெருமாற்கணிவி
த்தோமறைக்குலக்கன்னி, குறைவறமுடித்ததென்றுளங்குழை
வார்குலவியதுரோகமிங்கென்பார். 44

ஐயகோவிதற்குச்செய்வகையேதென்றலமந்தங்கற்றை
நாளொடாது, நையுமுள்ளத்தோடேகினாரந்நாளினிலிருவர்கண்
டறியாச், செய்யதாளுடையானவரவர்கனவிற்சேர்ந்திவைசெப்
புநங்கையாய், வையமீன்றவள்சாத்தணிமலரதற்கேவாஞ்சையெ
ன்றான்மண்முயல்வான். 45

ஆங்கவர்கனவில்கண்டவையெல்லாமவரவர்க்குரைத்துமை
யடியார், பூங்கமலத்தைப்புகழுவாரிறைஞ்சப்போகுவாராயினர்
புவியோ, ரீங்கிவைநிகழ்க்கைலைபங்கடவுளிறைதிருத்தவத்துறை
க்கிருந்து,நீங்குறுமுனிவரெழுவற்குநேயச்சனகற்குநிகழ்த்துவா
னெறியால். 46

மங்கலரகத்தேதமங்கையைமணப்பான்வருகின்றோம்நீவிர்
பெண்பேசி, யிங்குறுவீரென்றியம்பலுமுனிவரெழுவருஞ்சனக
ருமேகி, மங்கலந்தாங்குவாழிடையாத்துமங்கலைப்புகுதமாங்கல
ரும், பொங்குமாதரவினெழுந்துறப்பணிந்துபூசித்துப்புதுவி
ருந்தளித்தான். 47

மங்கலர்முகம்பார்த்திங்கிவர்மொழிவார்மாலயர்க்களவிடா
ப்பெருமான், சங்கரனையந்தமொன்றில்லான்றன்தன்மித்திரன்
சிவன்றனக்குன், றுங்கமாந்தவத்தாற்பெற்றநந்தாயைச்சுந்தரம
ணம்புணர்த்தென்ன, வெங்குலமுபார்ந்ததென்றெழுந்தாடியிறை
ஞ்சினன் பாடினனிருந்தான். 47

உய்ந்தனனடியேனுய்ந்தனனென்றங்குடன்படவுவந்தந்த
முனிவர், சந்தமார்சரணத்தெந்தைபால்வந்துசாற்றியேதாழ்ந்த
டிதொழலும், மிந்துசேகரனுமிறையவன்கைலையேகநாயகன்ம
ணக்கோலச், சுந்தரவுருவங்கொண்டனன்செல்வத்தவத்துறைக்
கேகுடர்ச்சோதி. 49

பிறைமணிமகுடமெனச்சுடரெறிப்பப்பிறழ்கடிப்பிணைகள்
கேயூர, நிறைமணிக்கண்டசரமெனநாகநிழல்விடநாந்தமதாயக்,
கறைமிடற்றழகுகாட்டநெற்றியிற்கண்கட்டபுகெரித்தொளிர்தி
லதத், திறமவைகாட்டப்பூதிசாந்தாகத்திசைகொள்வெண்பட்
டுடைசெறிய. 50

மாலவனின்னுமோகினியாகமதித்திடவுதித்தபேரழகன்,
றுதலிழ்கொன்றைத்தார்புயப்பெருமான்றன்கழுநீர்த்தொடை
சாத்திப்,பானிறச்செங்கட்பள்ளிமால்விடைமேற்பச்சைமால்கை
பிடித்தேறி, ஞாலமீரேழுங்கருதியுமார்ப்பநாதமங்கலத்தொடு
நண்ணா. 51

இருசுடர்கவிகைவரிசையினேந்தவிமையவர்கவரிகளிரட்ட
வருமறைமுனிவர்விசிறிசாந்தாற்றியாலவட்டங்கள்கொண்டணை
யத், தருமலரிறைப்பச்சிலசிலசுரர்கள்தன்தன்பொன்னடப்பை
தாங்குறச்சீர், பொருவிலாநந்திபுகழ்ந்துமுன்னடப்பப் புணரி
யோன்களாஞ்சிபூண்டெடுப்ப. 52

காலறைமந்தமாருதமாகிக்கமழ்ந்துமுன்றவழ்ந்திடத்தரும
ன், பாலமேலாசனவென்றேத்தியேயுடைவாள்பற்றவீசானர்மசங்
லச்சொற், சீலுறவெடுப்பவங்கியோனனந்ததீபங்கள் திகழ்ந்
திடப்பிடிப்ப,மாலுறுமேற்றுக்கொடிகளுங்குடையும்வாணிறைத்
திடவயக்கணங்கள். 53

இந்திரனமரர்தங்களுக்கெல்லாமேயினமணிவிடைமேவி
வந்திடநிருதியரக்கரோடசுரர்நாகருமவாழ்த்திவந்திப்பக், கந்தி
ருவோர்கள்கானப்பண்ணிசைப்பக்கருடர்விததியாதரர்சித்த,ரந்
தரத்துறைவோரனைவருமபோற்றவரியயனிருமருங்கணைய. 54

வேறு

* கைலைவாழிறைவன்வந்தான்கண்ணுதற்கடவுள்வந்தா, னயி
ல்பொலிசூலன்வந்தானழைத்துவாழ்வித்தான்வந்தா,னியலிசை
யிருக்குஞ்சத்தவிருடிகட்கிறைவன்வந்தா, னுயர்தவத்துறையா
ன்வந்தானென்றனவொளிர்பொற்சின்னம். 56

இருக்கினுக்கிறைவன்வந்தானிடைந்தவர்க்கருள்வான் வந்
தான், பெருக்குமந்தணர்கோன்வந்தான்பெருந்திருவாளன் வந்
தான், றருக்களின்நிறைந்தசெல்வத்தவத்துறைநாதன்வந்தான்,
திருக்கயிலாயன்வந்தானென்றனசின்னமெல்லாம். 57

வேறு

ஐந்தருமலர்வான்சிந்துறச்சிந்தாமணியிருநிதிகளோந்தேனு
ம், வந்தடிபணிந்துவந்தவர்க்கெல்லாம்வழங்குறத்தழங்குமங்கல
த்தோ, டிந்திரைமகரத்தோரணத்தோடுமிணங்கியதவத்துறைவீ
தி,வந்தெழுவிடையைநடவினவ்வூரடியவர்மலர்மழைபொழிய

மங்கலரிடைதலாற்றிடையாற்றுமங்கலமுனிவராச்சிரம,
பொங்கணுப்பசும்பொன்னினயணிகுயிற்றியியற்றியமாடகூடங்க,
ளங்கணம்பந்தர்கம்பலைவிதானமாயமைத்தனனாயகனருளாற், சங்க
ரனுமையோடுறைமணவறையுஞ்சமைந்ததுபலர்பணிந்தழைப்ப.

திருமலிசெல்வமணவறைநடுவண்செழுமணியரியணைதிகழ
வருசையினமரர்முனிவரர்கணங்கள்வந்திடவாசனம்வகுத்துந்,
பொருவருமுனிவர்பூரணகும்பம்பொற்புடனேந்திமுன்போந்தா
ரிருவர்காணரியான்றவத்துறைநின்றுமெழிலிடையாற்றில்வந்
தெதிர்த்தான். 60

சுருதிகளார்ப்புந்தூரியத்தார்ப்புஞ்சுரிவளையார்ப்புஞ்சொ
ல்லார்ப்பு,மருமறையார்ப்புமுனிவர்களார்ப்புமரம்பையர்சிலம்
பொலியார்ப்பும், வருதன்முன்னடிக்குமரார்ப்புமாமலர்கண்மண
ங்கொளவிறைப்பவரார்ப்பும்,பெருகியதேவர்க்கும்பெரியவென்றன
துபெருந்திருவிணையணந்திடுமோர். 61

மங்கலர்முதலாமுனிவரரெதிரேவந்தவரெந்தையைப்பணி
வார், சங்கராவிந்தத்திருவிளையாடலெம்மையாட்கொளத்தந்
தா, யிங்கியாங்கைபாலெறுபதுகன்னிகையையிவளென்றேயெழுந்
தார்த்தார், ரங்கவர்மகிட்சியறைவதாரிறைமையோடன்னகர்முன்ன
ர்வந்தனரால். 62

மறைமுனிவரர்தங்கற்புறுமனையார்மங்கலமெட்டுங்கையே
ந்தி, யிறைமுனம்வருவாரிணையடிச்சிலம்புமின்மணித்தண்டை
யுமேங்க, நறைநிறப்பஞ்சின்மெல்லடிபெயர்ந்துநாணுறவேகியே
நடந்து, முறைமையால்மணித்தட்டேந்துதீபங்கள்முமுறைமுத
ல்வனைச்சூழ்ந்தார், 63

இம்மணக்கோலமம்மநாங்கண்டதில்லையிவ்வளவுமென்றி
சைப்பார், செம்மையோனுருவங்கண்டிடக்கூசுந்திகழ்விழியென்
றுகண்புதைப்பார், கைம்மிசைவளைகள்கழலமுன்றெழுவார்கரு
ணையாலம்மனைபிறந்த, நம்மனைக்கடிமைநாமெலாமென்பார்நல்வி
சைமங்கலநவில்வார். 64

முனிவர்கண்மாதர்விபுதர்கள்நிறைந்தமுன்றில்வாய்வந்து
வெள்விடைநின், றினியவேதத்தின்பாதுகைசேர்த்தியிணையடிக்
கணைகழலார்ப்பத், தனதுபால்முகுந்தன்கைமலரேந்தத்தடக்கை
வைத்துள்புகப்பால்கொண், டணையள்மங்கலைவந்தடியிணைவிளக்
கவகமகிழ்ந்தரியணைக்குற்றான். 65

மங்கலத்தெழிலைகொண்டங்கிருந்தருளுமணவணிமாதினை
மாதர், செங்கரமேந்திச்சிவமணவாளன்சேர்ந்தனனெனவழைத்
திறைபாற், றங்குறவிருத்தவிருந்தனளமரர்சயசயவென்றடிதா
ழ்ந்தார், பங்குனிமாதத்துத்திரநாளிற்பகர்குருவாரவோரையி
னில். 66

அருந்ததிமுதலோர்பெருந்துதியெடுப்பவாடகக்கமலமேற்
றிருவுந், திருந்துபார்மகளுஞ்சாமரையிரட்டச்செழுந்திமகளிர்
பூச்சிதற, முருந்தினமுறுவற்செய்யவாய்கற்புமுனிவர்களமரர்க
ள்மகளிர், பெருந்திருவாட்டிபொருந்திருவாளன்பெயர்சொலிமங்
கலம்பேச. 67

மாதுலனிறைவன்மலரடிவிளக்கிமதுவற்கநீவேதித்துவதி
ந்த, வாதிநாயகிதன்றிருக்கரமையனருட்கரத்துய்த்தெனதனே
போ, நீதியமாகக்கொண்டெமையாளென்றுடன்வருங்கங்கை
யோடுய்த்தா, னீதியாய்க்கொண்டான்சிவனுமையொன்றாய்மேவு
றும்பொருளெனநிகழ்த்தி. 68

வேறு

பூதமார்த்தனவேதங்களார்த்தனபூத,
நாதராத்தனர்நாரணனான்முகனார்த்தார்,
மாதரார்த்தனர்வால்வளையார்த்தனவானோர்,
சாதியார்த்தனர்தருமங்களார்த்தனதழைப்ப. 69

நீதியார்த்தனமுனிவர்களார்த்தனர்நிறைந்த,
கீதமார்த்தனகந்திருவோர்கிளையார்த்தார்,
நாதமார்த்தனநதிகளார்த்தனநமையா,
ளாதிநாயகன்மங்கலமார்த்திடுமன்றுள். 70

சோதியக்கினிசாட்சியாய்ச்சுருதியின்வழியே,
நாதநாரணன்காண்பருங்கைலைநாயகன்றன்,
மேவதன்மாதவக்கன்னியைமணந்தனன்விந்தை,
யாதிமாதருமங்கலம்பாடினரார்த்தார். 71

சோதியங்கியில்வெண்பொரிதூவினன்சுத்தி,
யாதிநாயகிபாதத்தையம்மிமேல்வைத்தான்,
ஓதுகற்பினைத்துதியருந்ததியுங்காணென்று,
ஆதிமாதவர்தருந்துதிக்கருள்கைலாயன். 72

வேறு.

எந்தையெந்தாயொடுமிருந்தரியணையின்மேற்,
சிந்தையாரத்தொழுமங்கலர்சேர்வைசெய்,
துய்ந்திடக்காட்சிதந்துமையொடுமொருபொரு,
ணந்திமால்விடையின்மேனண்ணியேகடவினன். 73

நாரணனான்முகனாகர்கோனாதியா,
யாரணந்தொழுமுழக்கார்ப்பொடுமழகிய,
தோரணந்திகழ்திருக்கவத்துறைசூழ்ந்துபோய்க்,
காரணன்கோயிலுளிருந்தனன்கைலையான். 74

வேறு

கைலைநாயகனுமையொடுங்கருணையோடிருந்தாங்,
கியலுந்தேவரையிருக்கைகட்கனுப்பினானென்றும்,
புயலின்மேனியன்போற்றிடப்புதுமணம்புரிந்த,
தயவின்மங்கலப்பார்த்துறைவான்றவத்துறையின். 75

திருவிருந்தாசியற்றுமத்தலத்தினிற்செபிக்கி,
லருமையஞ்செழுத்தன்பொடுசித்தியாமுத்தத்,
துருவுகொண்டுயிரளித்திடுஞ்சிவகங்கையோங்கிப்,
பெரியதாஞ்சிவபுட்கரணிப்பெயர்பெறுமால். 76

உத்தமச்சிவகங்கையிலோர்தினம்படிந்து,
சித்தியஞ்செழுத்தெட்டெணூறுருச்செபித்துச்,
சத்தமாமுனிக்கிறைதனையுமையுடன்றாழ்ந்தே,
யத்தலத்தொருநாளமர்ந்தோர்முத்தியடைவார், 77

வேறு

அங்கண்மாஞாலப்பரப்பினிற்பிறந்தோரவ்வுடலகலுதல் முன்னந், திங்களங்கண்ணிச்சிவனாரிருக்குந்திருத்தவத்துறையி னிலொருநாட், டங்கிடக்காணக்கிட்டுமேலுலகந்தன்னிழற்கவி கையுட்படுத்துத், தங்கமாமாசற்றளப்பில்நாளிருந்துசுயம்பிரகா சமுமடைவார். 78

அருட்டவத்துறையையண்ணியதேசமமர்ந்துளோரடைய வெண்ணினரேற், குருட்டிணைவிழியேற்றெரிவிழியாவர்கூறுவ துருச்செவிகேட்கு, முருட்டலைமுடவர்நடையினைமுயல்வர்முழு வினைநோயெலாமுடியுந், தெருட்சிவகங்கைவந்துதோய்ந்தனரே ற்றீர்ந்திவைசிவன்பதம்பெறுவார். 79

பெற்றதாய்தந்தைபின்னைகோமறையோர்பேதுறவாதனைபு ரிந்தோர், பற்றருட்குருவைக்குற்றமதுரைத்தோர்பாதகராய்மது பருகினர்கள், கற்றனூலுரைக்குங்கருத்திறைப்பாவங்கருத்தினுற் காயத்தால்வாக்கா, லுற்றிடச்செய்தோர்சிவகங்கையாடிலோடி டுமுண்மையீதுண்மை. 80

வந்தியரெல்லாமைந்தரைப்பெறுவர்கன்னியர்மங்கலமுறு வர், புந்திகொள்பிரமாரியர்வித்தையும்பூவையர்மணத்தையும் பெறுவா, ரந்தமில்வறியோரளப்பிலாச்செல்வமடைகுவர்சிவகங் கையாடிச், சந்திரமௌலிதாள்பணிந்தொருநாட்டவத்துறை தங்கியங்கிருந்தால். 81

சித்திரைத்திங்கள்சித்திரைநாளிற்சிவகங்கைத்தீர்த்தமாடி னரேற், பத்துடைநூறுதானத்தின்பலனும்படைத்துப்புத்திரரை யும்பயப்பா, ரத்தனைப்பாற்றுட்சேர்வைசெய்தனரேலந்தவாண் டினிற்பலமடைவார், புத்திரநண்டாம்பவமெலாம்போக்கும்புண் ணியநண்ணிடுமன்றே 82

தெண்டிரையமுதநுண்டுளியிறைக்குஞ்சிவகங்கைத்தெரிச னம்பெற்றார், பண்டுபகரித்தநன்றியைக்கொன்றபாவராசிகள் பாந்தேகு, மண்டர்வாழ்சுவர்க்கமடைகுவர்பிண்டமளித்திடிற் கயையினிற்கோடி, பிண்டமார்சிராத்தப்பலன்பெறுகுவர்கள் பிதுர்களுஞ்சுவர்க்கமேவுவரால். 83

பிறந்தநாட்காலைச்சிவகங்கையாடிப்பெருந்திருவொடுதவத் துறையி, லுறைந்தநாயகனை வலஞ்செய்துவணங்கினுறுபலனொ ன்றனந்தமதாஞ், சிறந்தவாவணிகார்த்திகையின்ஞாயிற்றின்றி னந்தொறுஞ்சிவகங்கைதொழுதே, யறந்திறம்பாமலாடினரன் றேயவரவரவாவினதடைவார். 84

குடங்கையிலுழுந்துபதிந்தமாத்திரமச்சிவகங்கைநீரையுட் கொண்டால், விடங்களொத்தெழுந்தவினையறும்வியாதிவேரறு மமரநும்வியப்பர், தடங்கொளுங்கமலத்தவத்துறைத்தலத்திற் தரணிதானங்கொடுத்தனரேற், படங்கொளுவிதம்பத்தரம்பைய ரோடுபசியபொன்னுலகில்வீற்றிருப்பார். 85

நித்தியமழல்வேட்டத்தலத்திருப்பினிலமிசையச்சுவமேத ஞ், சத்திரயாகப்பலனெலாமடைவர்தவத்துறைதவத்துறையெ னினும், புத்திகள்வித்தைபுத்திரர்செல்வம்பூமிலாபங்கள்வாகன ங்கள்,சித்திகள்ஞானஞ்சிவனடிக்கண்புந்திருவருளால்வருந்திண் ணம். 86

தவத்துறைத்தலத்திற்றங்கினோர்செயலுந்தவமெனச்சாற் றிடவேண்டுஞ், சிவத்துறைமேவார்கள்செயலெலாந்தம்முட்சிவன் செயலாவதேபோலப், பவத்துறையகற்றப்பதியினிலொழுக்கம் பணிவுறுமன்புமபற்றினரே, லவத்துறையவன்றன்குலத்தினுமு ளவோவவர்நினைத்தவர்கட்குமிலையால். 87

திருத்தவத்துறையைச்சேர்ந்தவர்தம்மைச்சேர்ந்திடாதீவி னைநோய்கள், திருத்தவத்துறையைச்சேர்ந்தவர்தமக்குச்சேர்ந்தி டுஞ்செல்வமுந்திருவுஞ், திருத்தவத்துறையைச்சேர்ந்தவர்தமக் குச்சித்திகள் புத்திகள்சேருந், திருத்தவததுறையைச்சேர்ந்தவ ரெல்லாஞ்சேர்குவரெங்குமாஞ்சிவனே. 88

வேறு

செல்வராகுவர்சிவகங்கைசிவகங்கையென்றுற்,
கல்விசேர்குவர்கண்களாற்சிவகங்கைகண்டால்,
கொல்வியாதிபோஞ்சிவகங்கையாடிமேற்கொண்டால்,
வெல்வரியாவையுஞ்சிவகங்கைவெள்ளநீருண்டால். ˜9

வேறு

திருந்துசீர்கற்புப்பெருந்திருவாட்டிசசிவபெருமான்றிருமணச்சீ, ரிருந்தேவர்சொலினுமவ்விடைவிடைமேலிறைவனுமிறைவியுமுன்பாய், வருந்திருமாலுமயனொடுதேவர்மாமுனிவோருயர்வான்மேற், பொருந்திவந்திருப்பர்கேட்பவர்தமக்குப்புத்தியுணினைந்தவைபொருந்தும். 90

திருவளர்செல்வத்திருமணக்கதையைச்செப்புவோரன்பொடுங்கேட்போ, ரொருபரம்பொருளுக்கடியராங்கவிரையுண்மையீதுண்மையீதுண்மை, மருவுபுத்திரர்கண்மனைவிமித்திரர்கள்வளத்தொடுமனந்தநாள்வாழ்ந்து, பொருவருங்கைலைப்புராணர்செங்கமலப்பூவடிநீழல்வீற்றிருப்பார். 91

என்றிவையாவுமியல்பொடுமிசைத்தானிறைவனைநிறைபரம்பொருளை, மன்றினிலாடுமாசிலாமணியைமலைமகள்மணாளனைவணங்கி, யொன்றியவுளத்தோடவணிசைபாடியும்பருமிம்பருமுவக்கு, நன்றிகொள்தேவவிருடிகட்கரசனாயகனாரதமுனிவன். 92

செவிப்புலன்குளிரவகமலர்ந்தன்பாற்செப்பியசிவகதையெல்லா, முவப்பொடுங்கேட்டசவுனகர்முதலோருய்ந்தனமுய்ந்தனமென்றே, தவப்பெருமுனிக்குப்பூசனையாற்றித்தாழ்ந்துசூழ்ந்திறைஞ்சியேபோற்றச், சிவத்துளமுனிவர்சிகாமணிமகிழ்ந்துதிருவருட்செயலொடுஞ்சென்றான். 93

கருணைமாமுனிவன்சத்தியவுலகிற்கமலமீதயன்சபைக்கேகவருணைணிசுரக்குந்திருத்தவத்துறைமேலாசைகொண்டருமறைமுனிவோ, ரொருபெரும்பொருளையகத்தினுள்ளிருத்தியுவந்துவீற்றிருந்தனரிருப்ப, மருவினன்கைலைநாதனைப்போற்றுஞ்சூதமாமுனிவன் மாதவர் கோன். 94

கல்லலதுடுக்கைகொக்கரைதக்கைகாளங்காகுளிதுடிசாடி,
சல்லரிதாளங்குடமுழாப்பேரிதண்ணுமைதுந்துமிதடாரி,
மல்லரிவயிர்களைகுழல்மொந்தைமகரயாழ்முருடுகளாதி,
பல்லியமனந்தம்பாரிடமண்டம்பணிப்புறமுழக்கிமுன்பரவ. 55
95

(ஆறுவது திருக்கல்யாணவத்தியாயம் முற்றிற்று.)

ஆகச்செய்யுள். 343.

---

* சில பிரதியில் 55-வது செய்யுளாக உள்ளது.

## ஏழாவது பிரமகைவர்த்தத்தில் விஷ்ணு பூசித்தவத்தியாயம்.

திருந்துருவாதிசந்திரமவுலிசேவடிக்கோவுருவன்பும், வருந்திருவாழ்வும்புகழும்வாலறிவும்வரிசையுமதிகமாந்தயவுந், தருந்திருவாளன்றவதுறைப்பெருமான்சங்கரன்சிவகங்கைத்தடத்தோன், பெருந்திருவாளன்பெருந்திருவாட்டிபெறுந்திருவாளன்பேரருளே. 1

வண்டுழாய்த்திகிரிமாயனைமுதலாம்வானவர்வடபுலத்திருப்ப, வண்டர்நாயகனையுளங்கொண்டுமலையத்தமர்ந்துதாரணிசமமாக்கி, யுண்டுநீர்க்கடலையொடுக்கிநீள்விந்தமோரெழுத்துண்மைசண்முகன்பாற், கொண்டுதண்டமிழின்குரவனுஞ்சைவக்குடமுனியடிகள்கும்பிடுவாம். 2

சூதமாமுனிவன்போதலுநேமிசூழ்வனச்சவுனகாதியர்போய்ப், பாததாமரையின்மீதுாப்பணிந்துபணிமணியாசனத்திருத்திப், போதுகாணெறியின்வேதனையகல்ப்புதியநீர்மலரினாற்பூசித், தாதியாபனுறியமர்திருத்தலங்களருளெனவருந்தவனுரைப்பான். 3

சேட்டிளம்பருதித்தோட்டலர்கமலச்சேவடிசிறியனேற்கரிந்த, நாட்டமூன்றழகுத்தோட்டுணைநான்காநாயகனந்தியெம்பெருமான், றூட்டுணைக்கமலத்தோட்டிணர்தூவிச்சனக்குமாரன்பணிந்தேத்திப், பூட்டுவல்வினையின்மூட்டறக்கைலைப்புண்ணியன்றிறப்புகல்கென்றான். 4

மாலயன்றேவர்வந்தனைபுரியுமலரடிநந்திவானவனே, மேலவனுறையுந்தலமெலாமுன்னம்விளம்பினையின்னும்வேட்டனமால், ஞாலமீதியாருமுயர்ந்திடும்பொருட்டுநான்மறைறலசிட்டனெத்தலத்தால், சீலமாமுனிவர்க்கதிகனுயினனெத்தலநினைத்திடிற்சித்திசேரும். 5

மாயிருஞாலத்தென்னகர்க்கேனும்வதிந்ததநகரினைநினைக்கிற், பாயிருட்படலப்பாவம்விட்டகலும்பகருதியன்னகர்டியேற், கேயுநின்னருளாலெனுஞ்சனற்குமாரற்கிம்பரமருளிடுங்கருணை, யாயிரங்கோடிஞாயிறொத்தவிருமருளுருகந்தியாருரைப்பார். 6

பொன்னினற்கடுக்கைமுன்னவனுறையும்பொற்பதியிற்பு
கழ்புகல்வ, தன்னவனருளாமன்னினற்கன்றியறையொணாதன்பு
டையவனீ, தன்னிகரில்லான்பொன்னகற்பெருமைசாற்றுகேன்
கேட்டியென்றுரைத்தான், அன்னவன்வியாதற்கறைந்தனனவ
னுமன்பினேற்குரைத்ததென்றறைவான். 7

பூதலநடுப்பொற்பூதரமதன்றென்பூமியிற்பொலிவுறுநாப்ப,
ணூர்தருபொன்னிமாநதிவடபாலடர்வயிரவிவனமறையின், பாதி
யோசனையாங்காவிரிநதிக்கப்பதியதுபரப்பொருட்பதியா, நீதி
யார்புவனமூன்றுமேத்தெடுப்பநிலவியகீர்த்திபெற்றுளதால். 8

பூம்பொழில்பொதிந்தமாந்துறைநகர்க்குப்பூருவதிசையி
னிற்குரோசத், தாம்பதிகணிந்தமாம்பழத்தேறலப்புபத்தடநிறை
ந்தொழுகு, நாம்புகழுந்தவயிரவிவனத்துநாலுவேதத்தொடு
மமரர், ஆம்பலத்துருவுப்பறவையுமாகியமர்ந்துபத்தலத்தையாசரி
ப்பார். 9

அன்னகரத்துப்படைப்புழிமேதைநணிமகவோமகுண்டத்
திற், றன்னையேதுடங்கியைங்கரன்பூசைதானதுமியற்றியாங்க
வன்றன், பன்னிதன்பெயராற்காவிரிநதியுப்பரந்துவந்தலைகள்
வீசிடவே, மன்னுமான்மகன்றான்சிவகங்கைபடிந்துவான்சிவகர
த்துவந்தனனால். 10

வந்திடுமறையோன்சந்திரமவுலிவானனைந்தெசாளிவிடங்க,
னெந்தையெந்தாயாம் பெருந்திருமடந்தையிணையடிபூசித்தங்கி
றைஞ்சு, பந்தணன்றனக்குமருளதுபுரிந்துன்னையசிடையேகென
வவனு, மிந்தநற்றலமுன்சேர்வையும்பிரியாதிருந்திடவேண்டு
மென்றிரந்தான். 11

நான்முகக்கடவுளிவ்வுரைபுகலநாதனுநலமெனநவின்றங்,
கானநற்றவஞ்செய்திருக்குபாரணையன்புடனியாவரேயெனி
னும், வானவர்பிதுர்க்கள்திதியின்மங்கலத்தின்வந்தடிபணிந்துபூ
சிப்போ, ரீனமில்செல்வந்தணிநெடுநாள்வாழ்ந்திறையவனகைலை
சென்றிருப்பார். 12

அபூசொளிவிரிக்குபாலையடைபாலரியகாயத்திரிநதியாம், பழமறைமதியம்வெண்பணைல்லடிவாய்ப்பாரவிடவனுதியாஞ்சுயம்புக், குழகனையுபயநதிநடுவெபர்ந்தகோயில்நாயகன்றனைப்போற்றி, முழுதுளங்களிப்பான்கதழெரிநேமிமுகுந்தன்வந்தித்திடமுயன்றான். 13

வட்டவாய்த்திகிரிவாயினுற்றென்பால்வாவியொன்றமைத்துமாதேவர்க், கிட்டமாய்புனிதநீரினுலாட்டியெழின்பலையாசலச்சாந்த, மட்டலொம்பளிதக்குங்குமக்கலவைவளப்பெறச்சாத்திமாணிக்கக், கட்டலொம்பணிகள்பொற்றுகிற்றொடையல்கட்டழகுறவணிந்தனனல் 14

பெல்லிதழவிழ்ச்சுமல்லிகைமுல்லைவிளரிதட்சாதிசண்பகப்பூங், குல்லைவெண்குருந்தங்குவளைகோகனகங்குளிர்வகுளாதிபன்மலராற், சொல்லரிதாயவஞ்செழுத்தச்சுறற்சோதியையருச்சனைபுரிந்தே, நல்லபாரியத்தருக்கியமுதலாய்நல்கினன்பறையெடுத்தோதி, 15

முல்லைவாலருப்புவிருப்புமெல்லடிசில்மொய்த்திடுங்கருணைபால்தேனு, நல்லகோநறுநெய்பாயசப்பூபம்நளிர்புனலொடுநிவேதித்துத், துல்லியமானதுவரடைக்காய்வெண்சுருளொடுசுந்தரத்குரவிப், பல்விதமாயதூபதீபங்கள்பரமனுக்கெதிர்பணிமாறி. 16

பல்லியமுழங்கதிருத்தகீதங்கள்பயின்றிடச்சிவனெதிர்பணிந்தே, பெல்லியுப்பகனுகாண்மலெபடுத்தாங்கிவ்வணம்பூசனையியற்றி, பல்லிபங்கமலத்தயன்முதற்றேவரரகரவெனப்புடையார்ப்ப, வல்லியிமேலகுமருங்குசேர்மகளிர்வந்திசைதந்தெதிர்மலைய. 17

ஐங்கரக்கடவுளறுமுகப்பெருமானெழுபிறப்பகற்றருணந்தி, துங்கமெய்க்கணங்கள் சூழ்ந்துநின்றேற்றத்துந்துமிபந்தரந்தொனிப்பக், கங்கைகாவிரியுங்கவரிகளிரட்டக்கற்பகப்பூமழைநாப்பண், டிங்களஞ்சடையோனுமையொடுமெழுந்தான்செஞ்சொளிலிங்கநாயகத்தின். 18

அருளுமைபாகத்தொருபெருங்கடவுளடல்விடைமீது தோன்றுதலு, மிருவிழிக்கமலத்தெழுகணீர்ததும்பவிறைபவசய சயவென்ன, வுருகுநெஞ்சகத்தோடுரைதடுமாறவோங்குமானந்தசாகரத்தைப், பருகினனெழுந்தாண்பணிந்துடன்சூழ்ந்துபாடினனடினன்பரவி. 19

வேறு

ஈசமகேசுரவேதநமோநம
பாசவிமோசனபாதநமோநம
பூசுரவேதபுராணநமோநம,
தேசவிடங்கசிவாயநமோநம. 20

வேறு

அரிணமுமழுவும்வரதமோடபயமாங்கரகமலனேசரணம்,
கருணைமாநிதியேகைலைநாயகனேகண்ணுதற்கடவுளேசரணந்,
தருணவான்மதியநுதலிபோர்பாகச்சச்சிதானந்தனேசரணந்,
திரணமுமனைசயாதுணையலாற்றேசுவிடங்கனேசிவசிவசரணம். 21

ஏற்றெதிர்மலையுமாற்றல்சால்செங்கணேற்றுயர்த்துவசனே போற்றி, கூற்றினைக்கடிந்துகுமரனுக்கருளுங்கோற்றொடிபாகனே போற்றி, நீற்றணிநிலவுநாற்றிசைபரப்புநிறையருளுருவனே போற்றி, தேற்றிடுமன்பிற்றேற்றுமுனறேசுவிடங்கனேசெயசெயபோற்றி. 22

எனத்துதித்திறைஞ்சவுமையொருபாகத்திறையவன்கருணையானிரங்கி, யனைத்தையுங்காக்கும்வரமளித்தருளியளவில்செல்வங்களுமுதவித், தினைத்துணையேனுங்கெடாதவனபுளந்தான்சீர்பெறவருளியவ்விலிங்கத், தெனைத்தையுமுடையோனுமையொடுமிருந்தாணியாவற்குநினைந்தவையீந்தே. 23

அவிரொளிச்சோதியவ்விலிங்கத்திலடைந்திடுமந்திரமியாவும், பவமறுத்துயர்ந்தமூலமாமிலிங்கம்படைத்திடுமண்டங்களெல்லாந், தவறுருஞான்றுமழிவிலாதுறையுஞ்சச்சிதானந்தமாமிலிங்க, முவமிலாதுறையுமடைந்தவர்க்கருளுமுன்மையீதுண்மையீதாமால். 24

செய்யசெங்கமலைக் கறையுளாஞ்செல்வத்திருத்தவத்துறையிலோர்தீமிடம், வைகிடவதனிற் பாதியேயெனினும் வதிந்தானஞ்செழுந்தோதி, னையர்கண்டுவப்பச்சித்திவந்தடையுமையமில்சத்தியமாமால், கையுமுள்ளத்துமுனிவர்காளென்றானுதனைப்பொருளனுஞ்சூதன். 25

திரைக்கடல்சூழ்ந்தவிலப்பரப்பதனிற்செனனங்களனேகங்கட்டோறு, நிரைத்தழுக்கருமங்கணக்கிலபுரிந்தோர்க்கல்லதுநினைப்பினுங்கருதா, தரைக்கொருதிலதமாந்தவத்துறையிற்சனித்திடவிருந்திடவிறக்கச், சுரர்க்குறுந்தருமநரர்க்குறுமவற்றைத்துரிசிலார்தமக்குறுமன்றே. 26

இறந்திடத்தனத்தோடிருந்திடச்செய்வோரிருவர் தென்பாலுறுந்தருமன், சிறந்திடுந்தோரணிருவருஞ்செல்வத்திருத்தவத்துறைச்சிவபெருமா, னிறந்திகழ்தெய்வச்சரணயர்ச்சித்துநிதநிகழாவதிகாரத், துறைந்தனரிந்தத்தலத்துமெய்ப்பெருமையுரைத்திடலளப்பிறுமேளாங்கும். 27

வயிரவிவனத்திலோரிமைப்போதுவதிபவர்முத்தியிலுவதிவார், கயமுகாசுரனையமரார்முன்றலைப்பக்கண்ணுதலத்தலத்தடர்த்தான், செயல்புரிபதனாற்றிருத்தவத்துறையிற்றேவருமுனிவருமிடைந்து, யயலவன்றன்னைவயிரவிசெயங்கொண்டிடவையனத்தலத்தமர்வான். 28

திக்கெல்லாம்போற்றுந்திருத்தவத்துறையிற்சிவகங்கைசூரியதீர்த்த, மிக்கதோரயன்மால்விண்ணவர்முனிவர்விரைமலர்தூவிநின்றேத்த, அக்கமாலிகையாண்பெருந்திருவோடங்கமர்திருவோலக்கத்தனுகிப், புக்கிருவிழியாற்கண்டிடப்பெறுவோர்புவியினிற்பிறந்தபேறடைந்தோர். 29

மாற்றலர்செருக்கவலதொருகருமம்வரித்திரும்பொருள்வரைந்திட்டவ், வாற்றிடைநடப்போரம்மையோடமர்ந்தவப்பனைச்சேவைசெய்தகன்று, வேற்றினிலிவர்ந்தேயிறைவியோடிறைவனேகுவனவரொடுமென்றாற், றேற்றுவந்தேசுவிடங்கனையல்லாற்றிருவருள்சுரந்துளார்யாரே. 30

மற்றயதலத்திலளவிலாத்தருமம்வயிரவிவனத்திலோரிமைப்பிற், பெற்றிடுவார்கள்பேசினேழுண்மைபெரியமாமேருவினுயரஞ், சற்றனுவனையதபஞ்செபந்தருமந்தவத்துறையினிற்றவத்தினைச், சொற்றினநானுங்கேட்டிடுநீருந்துதிக்கமுன்செய்ததெத்தவமே. 31

திருநெடுமால்முன்பூசனைபுரிந்துதிறம்பெறுமிப்பெருங்கதையை, யொருபொழுதேனுங்கேட்டிடப்பெற்றோருடையவன்றிருவடிக்கன்புந், திருவளர்சிறப்புஞ்சந்ததிமனையுந்தழைத்திடத்தரணியில்வாழ்வார், தெருளழகுடையதவத்துறைநாதன்றிருவருளாற்சதிசேர்வார். 32

(ஏழாவது விஷ்ணுபூசித்த வத்தியாயம் முற்றிற்று)
ஆகச்செய்யுள் 375.

---

## எட்டாவது வசிஷ்டர்பூசித்து மகிமையுற்றவத்தியாயம்.

இன்னவாசகமிசைத்தலுஞ்சவுனகரிறைஞ்சி,
மன்னுமத்தலந்தனின்முனம்வசிட்டர்வந்தித்துந்,
தன்னிகர்ப்பெருமகத்துவமடைந்ததன்மையினு,
லென்னகாரணமதுவெனச்சூதனங்கிசைப்பான். 1

### வேறு

தவத்துறைவசிட்டன்றன்னிகர்வாமதேவனுஞானமாமுனிபோற், சிவத்துவமடைந்தானக்கதைகேட்போர்செனனமேசெனனமென்றறைவா, னுவப்பொடுமுபர்ந்தவந்தமாகற்பத்தொப்பிலாச்சத்தியவுலகிற், பவத்துறையகற்றப்பதுமபீடிகையிற்படைப்பவனாசுவீற்றிருந்தான். 2

அருமறையிமையோர்நிறையுமச்சபையிலருளொருவடிவெடுத்தனையான், றிருவருள்கொழிக்குந்திருக்கடைக்கண்ணுஞ்செந்துகிரனையசெஞ்சடையான், றருமமிவ்வுருவமெனமுழுநீறுதரித்துமேற்புண்டரஞ்சாத்தி, மருமலியிதழிவானவர்போற்றும்வாமதேவத்தவன்சார்ந்தான். 3

ஆங்கதுகாலையரும்பெருங்கற்பாளருந்ததிபொருந்தருட்கொழுனன், றங்குறுநீற்றுப்புண்டரங்கழைப்பச்சார்ந்தனனச்சபையுள்ளோர், வீங்குபேரன்போடெதிர்ந்தனர்பணிந்தார்வியந்தனர்புகழ்ந்தனர்மகிழ்ந்தார், பாங்கினிலவர்கட்கவரவர்செய்யும்பண்டையின்முறைப்படிபரிந்தே. 4

வேறு

ஆரணம்புரவுங்காரணப்பிரமாவாசனமிருவர்க்குமளிப்பச், சீரொடுமிருந்தாரவ்விடைநாதத்திவவியாழ்நாரதமுனிவன், பூரணகானவிஞ்சைவல்லவர்கள்புடைவரநடைகொடுபோந்து, தாரணிகமலத்தந்தையைவணங்கிச்சதுர்மறைவிதிமுறைபுகன்றே.

திருவருள்வாமதேவன்பாகத்திற்சேர்ந்தினிதிருந்தனன்றந்தை, யருண்முகநோக்கிநன்கிருந்தனையோவெனவையநின்னருளதனால், மருவியநட்பால்வாழ்ந்தனனிங்கேவருக்கும்விண்ணப்பமொன்றுளதிவ், விருவருமிருப்பவாசனஞ்சமமாயீந்தனையிவைதகாதெந்தாய். 6

அருந்தவத்தாலும்புலிச்சடையெம்மையனுக்கன்புசெய்ஞானப், பெருந்திறத்தாலுமைந்துடனந்தக்காரணமுப்பிரிவுறுதடக்கி, யிருந்தனைத்திணையுந்தன்னுளேகண்டவ்விறையன்றியொன்றையுங்காணாப், பெருந்திறல்வாமதேவனுக்கிணையாய்ப்பேசிடக்கூசுமெம்பெரும. 7

அத்துருவாசற்கிணையிலைபவனோடருந்தவவாமதேவனையு, மொத்திடுமென்னவுரைக்கலாம்வேதவொழுக்கில்வேதாந்தவுண்மையினிற், பத்தியிற்பரனுற்பாதபங்கயத்திற்பகரொணாவன்பினில்வசிட்டற், கித்திறமுளனோவிருவருமிணையன்றிவன்பிறப்பிணையுமோர்ந்திலையே. 8

பவளமால்வரையின்வீழெனத்துலங்கும்படர்சடைவடிவெலாந்திகழத், தவளவெண்ணீற்றுவாமதேவனுக்குச்சமத்துவம்வசிட்டற்குச்சாற்றற், கிவளவென்றுதகாலமாதவங்களியற்றிடவேண்டுமிவ்வணைக்கீழ்த், துவனுறநூல்வசிட்டமுனியிருந்திடலாஞ்சொல்லிடியெனமுனிசொன்னான். 9

திருத்தவத்துறையுந்திருநகர்முனிவோர்தேவர்களனுதினம்
போற்றுந், திருத்தவத்துறையைச்செபித்திடவெனவேசெய்யவ
ன்னைவகுமானதரந், திருத்தவத்துறையினீர்ச்சிவகங்கைகதே
வெனச்செகத்தவர்போற்றுந், திருத்தவத்துறையின்பெருமை
யைவாக்காற்செப்பவோர்கற்பமேசெல்லும். 9

வாளைபாய்தெங்கின்பாளைவாய்விண்டமலர்கள்செம்மாங்க
னித்தேறல், தாளதாமரைச்செம்மலரிடைச்சொரிதல்தழங்கழனி
ற்பொரிநறுநெய், வேளைபார்த்தமரர்திருத்தவத்துறையில்வேள்
விசெய்பலனறிந்தகல, நீளிடைநின்றங்கியற்றுதல்போலுநிலத்த
டியுறுமையைநினைந்தே. 10

குடவளைக்குவளையடைமதகிடையின்குளிர்மணியினைச்சி
னைத்தெனவே, யடைகிடந்தெகினமவணவனுறைதலன்னகர்ப்
பொன்னனாரழகு, நடையினுக்கிடைந்துமடமைகொண்டிந்தநற்
கருவுயிர்த்தகினடையாற், கொடியிடைமடவார்நடையினைவெ
ல்வான்குறித்தெனக்குலவுமெங்கெங்கும். 11

கவிழ்தலையரம்பைகுவிமுகப்புறக்கூன்கனிகனிந்தொழுகு
றுந்தேறல், துவரிதட்கனிவாய்த்துடியிடைமடவார்குடகச்செங்
கரத்தேந்து, மவிரொளிவீணைதந்திரிகாட்டுமஞ்சுகக்கிஞ்சுகவா
யார், வலியுணல்பாகத்தைவிரல்காட்டும்வனரிசைமலரளிமூட்
டும். 12

திங்கண்முன்னிலவின்மங்கையராடுஞ்செய்கைகண்டஞ்சுறு
மஞ்ஞை, யங்கவரளகமங்குலென்றெண்ணியச்சதியிலாடிநா
ணுறுமாற், பங்கையமுகச்செங்கொங்கையர்வதனம்பணிமதியெ
னப்படர்சகோர, மிங்கிவரறிந்துநகைத்திடவெழுந்தவிளநிலா
முக்கியேயேகும். 13

பஞ்சின்மெல்லடியார்படைவிழிக்குடைவார்பகைஞர்களி
கல்படைக்குடையா, ரஞ்சுவர்மாதரலர்முலையானைக்கடன்மத
யானைகட்கஞ்சார், குஞ்சிசேர்முடியினவரடிப்பஞ்சின்குழம்புறு
ங்குறிகொடுகுலாவு, மஞ்சுசேர்கொடையிறுடைவர்தொடைக்கிவ
ளர்கிளிவிடுவர்மானனையார். 14

ஊடல்கொண்டுயர்ந்தமாடமாளிகைமேமேலோவியம்போன்
றுறைபவள்முன், னூடல்கொள்தடந்தோளாடவனூடலகற்று
வான்விரகினைந்து, நாடியேகறைப்பல்லாடியிற்காட்டநயந்து
பற்காட்டினனென்று, வாடிடைநகைப்பவூடல்தீர்ந்துவக்குமா
டங்கள்மலிந்தமாநகரம் 15

வாங்குநுண்மருங்குலேங்கநீள்குறுதமகண்முலைக்குவட்டை
யோர்வளைக்கை, தாங்கியேபந்தாங்கோங்கியேயடிப்போர்தமது
குங்குமத்தனத்திணைபா, யீங்குனைப்பகர்வனெனவுந்தடித்தே
யேற்றிடநாற்றெறுமருங்கிற், றேங்கமழ்தென்றல்முன்றில்கள்
தெற்றிமுற்றவுந்துத்தியேதிரிவார். 16

மரகதமணியுமாணிக்கமணியும்வளரொளிப்புதியநித்திலமு
ம், விரவுறவெனக்காய்ப்பழுப்பசும்பாளைவிரிந்தபூங்குலைத்தலைப்
கமுகந், தருவுறழ்மூசலவிசிவாளோடத்தையலார்மிலைனெளிவீச்செ
ன், றருமுகிற்றுளியிப்பியின்மணியாக்குமளப்பில்பண்மரங்களுந்
தழைக்கும். 17

மாடகமுறுக்கித்தந்திரிதிருத்திமந்தரமுதல்வருமிசையிற்,
பாடிடும்வீணைமாதர்தமிடறோபரித்திடும்வீணையோதெரிதல், கூ
டுறாதென்னவிளரிசையெழாலுங்குழைந்திடக்கற்கள்சாந்தரைப்
போர், பாடல்விட்டிடும்போதரிஞ்சுவரிசைக்கிற்பாவையோவிம
மெனப்பதிவார். 18

கூந்தலங்கமுகோபூந்துணர்மாந்தர்கூந்தலோவென்றிவை
தெரிக்க, மாந்தர்களளகமவிழ்த்துநீராடுமகளிர்கள்வனமுலைவத
னஞ்சேந்தவாய், விழிகள்முனைமலர்க்கமலங்குமுதஞ்செங்குவ
ளைசவென்று, வாய்ந்தெழுமளிகள்சூழ்ந்திடுமாடில்மயங்குறு
மெழில்வயங்குறுமால். 19

கருநிறநீலங்கமலஞ்செய்குவளைகயிரவஞ்செண்பகந்தளவ,
மருவளர்கோங்குகுழன்முகமதரங்கண்ணெழி ஞசிவாயெயிறோ
ங், கிருதனமேய்க்குமிம்மலரென்றேவந்திழையாரறிந்தாட, வ
ரியினமறியாதவையவைமலர்களவணிவனோடிமீண்டயரும். 20

தம்மனைமாடத்தம்மனைகழங்குதையலார்நையுநுண்மருங்கு, லிம்மெனவிறுமென்றென்றறிந்தொன்றையேற்றிடல்போல வாட்டயரச், செம்மைகொள்பனைத்துக்காளையர்திரண்டுசேணுழனைக்குவாரண்ணுந், தம்மவேரரசையலரிமேற்கண்ணைவைத் தருந்தவமாற்றுவார்போலும்.

நல்விசேர்விழியார்செவ்வியவதரங்கொல்வையங்கனியென நயந்து, கவ்வுமாகாப்பைங்கிள்ளையுள்ளுறலுங்கண்டுமுன்கொண்டிடும்வடுவை, யெவ்வமுற்றதுவென்றிகழ்ந்தவப்பயிற்றுமிறைதிருமுகங்களிலியம்பு, மவ்வனைக்கேட்டபூவைகள்போக்கவரியகாரணமறைந்திடுமால். 22

சந்தனுடவியிற்றவழ்ந்துபூங்குவளைத்தண்பணையெங்கணுமுலாவிக், கொந்தலர்ந்துணர்ப்பூநந்தனவனத்துக்குலவியேகுளிர்மணங்கெழுமி, மந்தமாருதம்வந்தசைதிருவீதிமருங்கெலாமர்தருநுண்மருங்குற், செந்திருவனேகர்முன்றிருப்பெறுதல்தெரிந்தவண்செறிதல்போற்செறிவார். 23

மாங்குயிலேங்கவாங்குழைபகர்நுண்மருங்கினார்நெருங்குபன்மாடத், தாங்குறவமரர்தாங்குருவவாவுற்றடிநிலனுறாமையாலயர்வார், பாங்கினந்தணர்களருமறைவிதியிற்பரிந்திடும்வேள்வியிலவிகள், வாங்குறவருங்காலின்னகரத்தேவதிந்திடப்பிறந்திலேமென்பார் 24

இருக்கெடுத்தோதியருக்கியங்கொடுக்குமிருபிறப்பாளருளியாகம், பெருக்கியவோங்குமூபங்கணாட்டிப்பிறங்குவவறங்கொளுஞ்சுருதி, வருக்கமூவாறுபுராணமோராறுசாத்திரமிருதிகளனைத்துந், தருக்கமிட்டறிந்தோஞ்சிவன்பொருளென்னத் தாபித்தசயத்தம்பம்போலும். 25

ஞானமாமறையோர்முனிவருக்கூட்டுநாற்றிசைச்சாலைகடோறுஞ், சேனமாம்பறவைபடுத்தவைவிளங்குந்திருத்தவத்துறைசிவனுமைவாழ், தானமாமிதன்மேற்பறந்திடனீதித்தருமமன்றெண்ணியத்தலத்தை, மானமார்பறவைபடிந்தநாற்றிசையும்வணங்கல்போற்றணித்தனிவயங்கும். 26

வேறு

பாரெலாம்பூவின் வாசநீரெலாம்பதுமநீலங், காருலாஞ்சோ
லையெல்லாங் கருங்குயில்மயில்களனைம்,பேரெலாமுடையாளுமை
ம்பேச்செலாமரனார்கீர்த்தி, பூரெலாஞ்சைவச்சேர்வையுமாபதி
யொருவன்றெய்வம். 27

மங்கலமுழக்கமெங்கும்வைதிகரிருக்கையெங்குந், தங்குறு
ந்தருமமெங்குஞ்சைவர்கள்மடங்களெங்குங், கொங்கலர்தொங்
கலெங்குங்கோடியகிடங்களெங்குந், தொங்கலுங்கொடியுமெங்
குந்தோரணவாயிலெங்கும். 28

பூரணகும்பமெங்கும்பொலிந்திடுமாடமெங்குந், தாரணிவி
தானமெங்குஞ்சத்திரச்சாலையெங்குங், காரணநீதியெங்குங்கல்
விகேள்விகளெங்கெங்குஞ், சீரணிமுனிவர்தேவர் திரண்டிடுங்
கோயிலெங்கும். 29

வேறு

அங்கததிருநகர் தங்குற்றிடும்வளமப்பொற்பதுமனையறை
கிற்பான், சங்கத்தமிழொலியங்கத்தொடுமறைசந்தத்தெழுமொ
லிமலிவாகித், துங்கத்தவரொடுமின்பப்பணவர்கள்துன்பற்றிடமி
குமனுவோதிக், கங்குற்பகலொடுதங்குற்றனர்சிவகங்கைத்தடவ
ளனளவேதே. 30

பண்டைக்கொடுவினைவிண்டற்றதுபசைபடிறற்றதுமுழு
நோய்க, ளண்டற்றிலமலமவலத்தொகுதிகள்படியத்திவலைகளது
பட்டே, மண்டற்றதுதிருவளனுற்றதுமனைமலிவுற்றதுகவினைதக
ளென்றே, கண்டற்புதமொடுமிளைரார்மிகுசிவகங்கைத்திருநகர்
கண்ணுற்றான். 31

வேறு

நறுந்துணர்ச்சுகந்தந்தழைதருநாட்டைநாட்டத்தால்நோ
க்கினனமது, பெறும்பொருணிதியத்தளகையுங்கண்டோம்பின்
னுளநன்னகரெல்லா, முறுந்திருக்கண்ணானோக்கினோமிந்தவூர்ப்
பெருவளனுமிங்குறைவோ, மறந்திகழ்தருமநிதியுமநமக்கேயதிச
யங்கொடுத்ததென்றிசைத்தான் 32

வேறு

காண்டொறுங்காண்டொறுங்கண்களிப்போடுந், தூண்டிட வுளமகிழ்வித்துச்சோதியா, யாண்டவனுமையொடிங்கிருக்குமா தலாற், சேண்டிகழ்வளனெலாற்செறிந்ததாமென்றான், 33

வேறு

அருந்தவச்சூதன் முனிவருக்குரைப்பானளகையாளரசனு ங்கெய்தி, பெருந்தவத்துறையும்வயிரவிவனத்திற்பெருகியபெறு ஞ்சினகரமு, மிருந்தவத்தோர்களிருக்கையும்பாந்தளெலியொடு ங்கூடிவாழ்வதுவுந், திருந்தலர்கண்ணுற்கண்டனன்றெய்வத்தட மெனச்சிந்தனைசெய்தான். 34

நுணங்கியகேழ்வி முனிவிர்காளிந்த நுவலருந்தவத்துறையு றைவோர், வணங்கியகுணனுமிணங்கியதயவும்வாய்மையும்நேய முமுடையோர், கணங்கமிளாடுறையுங்கண்ணுதற்பூசைகடவுள ராற்றிமாற்றலரைப்,பிணங்கிடவென்றூர்பெருந்திருவாளன்பேர ருட்பூசனைப்பேற்றால். 35

தண்டலையுடுத்தவத்துறைசண்டோர்சன்னதிமுன்னர்வந் துற்றோர், கண்கவர்சுயம்புக்கடவுளைப்பூசைகருதினர்யாவரே யெனினு,மண்டர்கள்சூழவணிவிடைமீதேயம்மையோடப்பனைக் காண்பார், பண்டையதாபத்திறையமுமிலையப்பதியன்றிமன மொன்றிற்பதியா. 36

நறைகொள்செங்கமலத்துறைமறைமுதல்வனல்கியசனக னேமுதலோர், முறைபிறழாதமுனிவர்களுமூவர்முத்திபெற்ற த்தலநீங்கா, இறைவனுந்தயவினிருப்பதத்தல்மேல்இரும்பொருள ணவளவிந்தால், நிறைபொருண்மேருநிகர்க்குமத்தலத்தினிலை மையைநிகழ்த்துவாரெவரே. 37

நீற்றொளிதழைத்துநிலவியமேனிநிருமலவேதியனொருவ, னேற்றிடவன்னமத்தலத்தளிக்கிலெண்ணிலார்க்களித்திடும்பல முஞ்,சாற்றுதலரிதத்தவத்துறைநகரைச்சார்ந்தனன்புட்பகததி ழிந்தே, யேற்றுயர்கொடியெம்மிறைசினகரங்கண்டிறைஞ்சிஞ ணிறைந்தவுண்மகிள்வான். 38

அன்னநகர்வலமாய்வருதலும்வேதமடைவுறப்பிறிந்தவர்ப்
பயந்தோன், முன்னுறக்கண்டுபணிதலுமுனிவன்மொழிதுவாணி
வ்விடைபோந்த, தெனவெனவினவியாசனமுதவிவங்குமாச்
சிரமத்திலிருந்து, பன்னருந்தலங்கள்கண்டுவந்தமையும்பணிவி
சும்பெழுமொழிப்பண்பும். 39

அடைவிலாங்குரைப்பப்பராசரன்வினவியளகைகாவலன்
சிவபூசை, யுடையவனாகியுயர்ந்தனைநினைக்காரொப்பிறந்தப்பொற்
பதிப்பெருமை, படிமிசையாவர்பகருவரம்மபரம்பொருணிரந்
தரமுறையு, மிடமிதையல்லால்வேறுமொன்றுளவோவெமக்கு
நித்தியமளித்ததுவே. 40

மதுரமாமமுதம்வானவரொடுநான்வைத்திடவிலிங்கமாய்வ
ளர்ந்த, ததிசயமிந்தத்தலமிதிற்சுயம்புவாகியயேகநாயகனை, விதி
முறைப்பூசையாற்றினீவேண்டுமெய்வரம்பெறுகெனவிளம்ப, மு
துமறைமுனிவன்மொழிப்படிபூசைமொழிபனைமடக்கியேமுயல்
வான் 41

நாடினனவ்வூர்நலனெலாந்திருமுன்னண்ணினன்சிவகங்
கைநளிர்நீ, ராடினன்பூதியணிந்தனன்னனைமாற்றினன்சுயம்பு
வைகண்டான், னாடினன்பாடியடிக்கடிபணிந்தானழைத்துவாழ்
வித்தவெம்மையா, தேடிநீயாண்டாயென்றவன்பூசைசெய்திட
வெய்தினன்சிறந்தே. 42

கங்கையாற்றிகழ்நன்னீரினிலாட்டிக்கந்தமுஞ்சுகந்தனன்
மலரு, மங்கையாற்சாத்தியாடையாபரணமணிபணிமகுடமுத்
தார, மெங்ஙனுயாகனைபொனைவணிந்தமுதோநாடீர்ப்புனல்புலாதிக
ணிவேதித், திங்கெமையாளென்றினியதாய்ப்பூவமேற்றினனியக்க
ர்கள்கோமான் 43

இயக்கர்கந்திருவர்முனிவரமரிருங்கணமுரகர்நின்றேறத்
நயக்குறநிருத்தகீதவாத்தியங்கள்நாற்றிசையினுந்தழைத்
தோங்க, மயக்குறுவமரவரம்மையர்நடிப்பமலர்மழைமாரியும்
பொழிய, வியக்குமுன்வருணன்றனக்கருள்சுவைவிளங்கொளிம
ணியினைவிருப்பால், 44

தேசொளிவிடங்கச்சோதியாமிலிங்கத்தேவர்கடேவனுக்க
ணிந்தான், வீசிடக்கவரிகவிகைகினேறுங்கமேம்படுகொடிகளுமி
டையப், பூசுரருக்குபுகன்றிடதூபதீபங்களேற்றியேசூழ்ந்தெம்
மீசனைப்பணிந்தா, னுமையொருபாகனென்னையாட்கொண்டரு
ளென்றான். 45

ஆண்டகைதிருமுனிவேதனமெல்லா மடியருக்கதிதியர்க்க
ளித்துத், தூண்டுசெங்கதிருமெதிருறக்கூசுங்சுனையந்தன்பிராண
னெப்பதனைப், பூண்டநாயகனைத்தவத்துறைப்பொருளைப்புரிகு
ழலுமையொடும்புகழ்ந்தே, தாண்டவாவென்றாழ்ந்தடிபணி
யத்தரித்திலன்றவத்துறைநாதன். 46

இறைக்கினித்தியமேகாட்டியோர்கலையேயென்றுமாங்கொ
ன்றைநீண்முடியும், விறற்கதிர்நயனமூன்றுமோர்பாகமின்னொடு
ந்தன்னிகரில்லான், திறற்சதாசிவந்தந்திகழொளிமதியச்செய்
கையாந்தண்ணளிசிறப்ப, விறற்பெரும்பள்ளிமால்விடைமீதே
விபுதர்பூத்தூவவந்தனனால். 47

அச்சுதன்முதலோர்க்காருயிரளித்தவணிமணிகண்டனைங்
கரத்தோ, னச்சடல்வேலோன்நந்தியம்பெருமானுரணனாதியர்
சூழ, முச்சகம்பரவவருதலுங்கண்டான்மூண்டகச்செங்கரங்கு
வித்தா, னிங்கையினடிப்பாடினனெதிர்வீழ்ந்திறைஞ்சியேபோற்
றன்மேயினனால். 48

வேறு

பவமகேசகிருபாகரசங்கரபக்தர்க்
கவமகத்துசெஞ்சூலவெண்கபாலவாதார
சிவசிதம்பரதிகம்பரகேசவபரதெய்வத்
தவதயாபரதவத்துறைநாயகசரணம். 49

பாலலோசனபரருதிகோடிப்பிரகாச
காலகாலமுற்காரணகாரணகரண
மேலவாலவெண்பூதிபூஷணநிருவிகார
தாலமேம்புகழ்தவத்துறைநாயகசரணம் 50

வினைக்கழுத்திருந்தருளியதிருப்பலவிமல
வனைத்துமாகிய திவ்வியானந்தமுக்கண்ணு
வினைத்தகொன்றையவிச்சுவநாதமாதேவ
தனக்குநேரிலாத்தவத்துறைநாயகசரணம். 51

## வேறு

சரணமென்றிவ்வாறேத்தலுஞ்செல்வத்தவத்துறைநாதனி
ன்னருளால், வரமெனைமேகட்டி தருகுவல்குமேபரிமணிச்சுனைபத்
தொருமதுடங், திருவணியன்பாற்சாத்தினையென்றுதிருவுளஞ்
செய்தலுமாளைகைப், புரவலனுடலங்கம்பிதம்புளகம்போர்த்திடப்
புந்தியுங்குழைந்தே. 52

அடங்குறுவன்பாலடிமிசைப்பணிந்தேயறைகுவானுர்வமீ
னா, விடந்தடுத்தாட்கொண்டருளியதேசவிடங்கனேவேதநார
ணனு, நடக்கொணுந்தெய்வத்தாமரைச்சரணநாடிறக்கூசவரொன்
றால், முடங்குளமுடையேனெவ்வணந்துதிப்பேனென்றனுமெழு
கெனமொழிந்தான். 53

எழுந்தனனழுந்துமுள்ளமோடாடியெழுத்தினனீத்தநீள்
விழியன், வழிந்திடமலர்தூய்வாழ்த்தினனையாமலரடிக்கன்பரு
ளென்னைப், பொழிந்திடுக நினைப்பூந்தவத்துறையின்புகளள
காபுரியெனும்பேர், மொழிந்திடலின்றுமுதலிந்தநகர்க்கு முதல
வவென்றேபெயர்மொழிக. 54

நர்மழித்தொழுவினைக்கிருமிதியுநலத்தகுகிருத்தகுசெல்
வ, மெய்மடிக்கன்போடிருந்தனமென்றேயிருந்துபோந்தனன்சுயம்
பிலிங்கக், தம்பதிச்சடைபோர்போற்றியநமர்ந்தவமுதலிங்
கத்தையுமர்ச்சித், தம்மணிமிடற்றோன்காதலேசுரமாமிருகை
யால்முனியியற்றுதலால். 55

என்னநின்றேத்தியிடையறுவளங்கோனிரும்பதியோ
டுங்குமிறைக்கு, மன்னிடவளித்துவணங்கியதலத்தில்வாழ்ந்த
வனமுளிறைப்போந்து, பொன்னிருநிதியமளவிலாச்செல்வம்பொ
ருந்திப்பேர்ளகைபிற்போந்தான், தன்னைநேரில்லாத்தவத்துறை
செல்வந்தருநகரெந்தனுான்றினுமே. 56

உச்சிநீண்டகன்றபச்சிலைப்பாசினுயர்நிறைச்சிறையிருந்தத
னா, லச்சிவபுரமச்சுவத்தவாரணியமெனச்சனக்குமாரனுக்கன்
பி, னிச்சையிற்சிலாதனருளியனந்தியிறையவனருளினமெனன்
னச், சொச்சமாம்பொருளிற்றேய்ந்திடுஞ்சூதன்சூழ்ந்திடுமுனிவ
ருக்குரைப்பான். 57

குபேரன் சிவபூசனை வத்தியாயம் முற்றும்.

ஆகச்செய்யுள் 625.

---

## பதினைந்தாவது அமுதலிங்கந் தோன்றிய வத்தியாயம்.

எங்குலத்தேவர்நந்திபெம்பெருமானியம்பியதனைத்துங்கே
ட்டிறைஞ்சிக், கங்குறுமன்பிற்சனற்குமாரவென்றலைவனையமு
தமாமிலிங்க, மங்குலங்கதுவும்பாராசரன்பூசையாற்றியவாறதே
தென்னச், செங்கனிவாயாற்பகர்ந்தனனந்திதேவெனச்சூதன்
செப்புவனால். 1

பைந்துளாய்ப்படலைச்செந்திருமணாளன்பண்ணவர்முனிவ
ரர்பரிந்து, நந்துலாநாலைப்பாற்கடல்கடையநண்ணியுதின்னமுத
ன்னா, ளந்தநல்லமுதைநான்குகூறாக்கியமரர்கள்தங்கள்பங்கன்
றிப், பந்தமாரசுரர்தமையும்வஞ்சித்தபங்கையுநுங்கினார்பகை
யால். 2

மற்றொருகூறுதென்புலவாணர்மகிழ்ந்திடவழங்கினார்முனி
வர், உற்றிடுபாகம்பாராசரன்வாங்கியுக்கமதலமெதென்றுன்னிப்,
பற்றொடுவிளங்குமடியவரோடும்பரிவினாற்போந்தனன்பழனஞ்,
சுற்றிடுந்தடவையிடனெலாந்தாளஞ்சுடர்விடுந்திருத்தவத்து
றையில். 3

ஆரணன்றேவர்நாரணன்முதலோரனுதினம்போற்றுமி
ன்னகரிற், பாருளோர்யாவராயினுங்கணத்திற்பாதியிலாங்கம
ர்ந்துறினும், பூரணன்கயிலைபொருந்துவரிவ்வூர்ப்புராணங்கள்
கேட்டவர்பாவ, மாரணமாகும்புண்ணியம்வளருவாழ்நாண்மிகு
ந்துவாழ்ந்திடுவார். 4

திவ்வியஞானத் தலமிதெனவெண்ணிச்சிவகங்கையாடி நீ
றணிந்து, கொவ்வையஞ்செவ்வாய்ப்பெருந்திருவாட்டி கொழுந
னைமழுவலனேந்து, நவ்வியஞ்செங்கைநாதனைச்சுருதிநன்முறை
யாற்பணிந்தமர்ந்தே, வெவ்வினையோர்களடையினும்பாவமெறிந்
திடுந்திருத்தவத்துறையில். 5

மூவுலகத்துமுனிவர்கடமையுங்கொணர்மின்களென்றுமுன்
னின்ற, வேலவர்தம்மையினிடைகொடுத்திடலுமியாறையுமழைத்
துவந்தனராற், பாவடிபுழைக்கைமுப்பமதவேழம்படர்வுறும்படை
மன்னர்மறுகிற் றூவியம்பனிநீர்ச்சந்தமெண்டிசையுந்துதைந்
தெழுந்திருத்தவத்துறையில். 6

வந்தநன்முனிவர்வந்தனைபுரிந்தார்மகிழ்சிவகங்கைநீரா
டிச், சுந்தரநீறுதரித்தனர்சூழ்ந்தார்சுடர்மணிச்சுயம்புவின்கோ
யிற், சந்தனைக்கனிற்றைப்பெற்றகன்னிகையைக்கடவுளைக்கண்
கணீர்த்துப்பாய், புந்தியாறறெழுதுபுகழ்ந்தபின்முனியாற்புகுந்
தனர்பணிந்தவணிருந்தார். 7

ஆயகாலையினிலசுரர்கள்சுரரையயச்சுதமோகினிமயக்கால்,
வாய்மடுத்துண்டபினறெனிந்தசுரர்வஞ்சித்துமறைந்தனரென்
றே, பாயலையுததிப்புவியெலாம்பார்த்துப்படைகொடுமேவினர்ப
டைப்பைகட், மீயுயர்கனகமணிநெடுமாடம்விளங்கியதிருத்தவத்
துறையில். 8

கண்டனரசுரர்முனிவரரமுதக்கடமொடுமிகுந்தவைகம
லக், குண்டங்களுடுத்தமூதெயில்வளைந்துகொண்டனர்வாயில்
களனைத்திற், றண்டர்களெண்ணாயிரரொடுந்தென்பாற்சார்ந்தன
ரவுணர்கள்தலைவன், மண்டினனமேல்பாலாயிரப்பத்தாமாற்றல
ர்தம்மொடுமேல்பால். 9

வஞ்சகரெண்ணாயிரரொடுங்கீழ்பால்மன்னினனந்தகன்ம
தங்கொள், குஞ்சரமோர்பத்தாயிரம்பெலன்கொள்கைகயன்வட
திசைகுறுகி, யெஞ்சலிலெண்பத்தெண்ணாயிரரொடுமிறுத்தன
னிவ்வணமசுர, ரஞ்சுரவார்த்துச்சூழ்ந்திடமுனிவரமுதினையவ
ணிக்குளமைத்தே. 10

அருந்ததிபரவும்பெருந்திருவாட்டியழைக்குவாழ்வருள் தவத்துறையான், திருந்துசன்னதியின்பராசரன்முதலாய்த்திரண்டனர்பணிந்தனர்கண்ணீர், சொரிந்திடச்சிவாயசுராதிபவரியசுயப்பிரகாசமகேசா, வருந்தியவன்பால்வணங்குசெஞ்சரணவானவர்ஞானநாயகனே. 11

எங்களையகனேயாலமுண்டமரரிடர்கெடுத்தாண்டவா நின், றாட்பங்கயமுடைந்தோனையவென்றிறப்பப்பணிமதிக்கொழுந்தணிபரமா, மங்கலூர்தியனையரவழைக்கிதனைமாற்றெனமுனிவாமகவான், றுங்கமாமுகம்பார்த்தசுரர்கள்முதந்துய்த்திடிற்புவியெலாந்துலைப்பர். 12

ஆதலாலவரையட்டிடமையெனப்பாவென்னவாகண்டலனதல்வானை, மீதுலாமேகராசனையழைத்துவிடாதுநீகனமழையாசப்பாதகவசுரர்படைமிசைப்பொழிகதுபாற்றெனப்படர்ந்துகால்பொழியச், சாதலாயினர்களசுரர்களாந்தத்தலைவர்கள் தணிந்தனரிருந்தார். 13

இன்னமுதகனையீசற்குத்தென்பாலிருப்புவியுட்புதைத் திருந்தார், பொன்னனிர்சடைப்பராசரன்முதலோர்பூந்தவத்துறைநடுப்பொலிந்த, தன்னிகரில்லானருளினலந்தத்தலைவர்கடாமையுர்தடிந்தே, யன்னநல்லமுதம்பராசரனெடுப்பவிறுகியதந்தவானமுதம். 14

கண்டனன்வேதக்கடற்கரைகண்டகான்முனைதன்னையீன்றெடுத்தோன், கொண்டனன்மகிழ்வுகுளிரமுதத்தைக்கோகனகக்கரங்களினு, லண்டருமுகுரிலிங்கமாயமைத்தானுதலாற்கரதலேச்சுரமாம், பண்டையெம்பரர்க்குத்தெக்கணத்தபர்ந்தபச்சிமசதுவாரமாய்ப்பரிதமே. 15

பஞ்சனமாட்டிச்சந்தணிந்தலர்கள்மறைகொள்மந்திரங்கொடுசாத்தி, நஞ்சமுதுண்டவினியநல்லமுதநாதற்குநல்லமுதூட்டிப், பஞ்சின்மெல்லடியாள்பங்கனேயெனறுபரிந்திந்தவமுதலிங்கத்தே, தஞ்சமதருளியமர்ந்திடவேண்டுந்தண்ணளியளித்தெனத்தாழ்ந்தான். 16

எழுந்தனன முனிவர் தம்மொடுஞ்சுயம்பாமிறைமுனமெம்
மையாண்டவனே, பொழிந்தனின்னருளாலித்தலத்திலிங்கப்
பிரதிட்டையும் புரிவித்தாயென்று, மொழிந்தனன புறம்போந்தத்
தலத்திருந்தான முனிக்குழாத்தொடும்பினருமேபோன், வழிந்த
பேரன்போடாங்குநின்றெங்களவரதனைப்பூசனைப்புரிந்தே. 17

எங்குமோர்கருமத்தலத்தையிச்சித்தேயிறைஞ்சினர்க்கன்
றுயராயழுவு, மலைசையிமேனைத்திராந்தகமருங்கிலாடகத்துறை
யிலைவிக்கந், துங்கமாமணிப்பொற்பிரசபொமேமர்ந்தான்
சுராசுரமுனிவர்தொழுந்தாட், பங்கயன்வேதாகமபுராணங்கள்
பகர்குருகுதிபெரும்பெருமான். 18

அமுதலிங்கந்தோன்றியவத்தியாயம் முற்றும்.

ஆகச் செய்யுள் (643)

---

## 16-வது பராசரன் பூசித்த வத்தியாயம்.

முண்டகத்தொருவனாருஞ்சனற்குமாரன்முதல்வனுரந் தி
யையவணங்கித, தண்டகனமுதலோர்தமைகளைத்துடிந்தெவண
ஞ்சாற்றிடல்வேண்டும், பண்டைநூல்வல்லபராசரர்க்கமலைபரி
வுடனருளியதைது, புண்டரந்தழுதுபொலியுங்குரவனைடயொங்
கும் புகலெனப்புகல்வான். 1

அக்கதைகேட்போர்க்காயுருந்திருவுமரணடிக்கன்புமி வா
தெய்து, மிககசிந்தையினிலவேண்டியதனைவர்வேதபாரகர்மி
டைந்தோய்குஞ், செக்கரஞ்சடையோன்றிருககாயதிருத்தவத்
துறையினிலிமைப்போ , தொக்கவோடேனுந்தனித்தேனுமு
றையோடச்சவமேதமேயுறுவார். 2

பெருந்திருவாட்டிபொருந்திருவாளன்பெய்க முற்று மனை
யொருகாற், பரிந்துளனேனும்திலானேனும்பார்த்திடிற்றவத்து
றையணியி, லருந்தவமுனிவேயவனவன்குலத்தோரளப்பிலர்பா
வங்களெல்லாம், பிரிந்தொருவிடதந்தங்கடமினைறிப்பேரமுற்
றுஞ்செனப்பிரியும். 3

மூலமாமறைதிச்சோதிலிங்கத்தைத்தமுதுந்தனுமாறிவுருப்பொருளைப், பாலலோசனனைப்பார்வதிபாகப்பரஞ்சுடர்விடங்கனைப் பதியை, மாலகீழானையழைத்துவாழ்வித்தவப்பனையொப்பிலா மணியைக், காலமேழ்பரவுந்தவத்துறைச்சத்தவிருடிகள்தலைவனைத் தாழ்ந்தான். 10

ஒருபரம்பொருளேபோற்றியுயர்பரமேருபோற்றி, யிருவர்காண்பரியசர்வேசனேபோற்றிபோற்றி, யருவுருவகிலநாதவாருமறையந்தத்தோங்கும், விருமனல்விழியாய்தேசுவிடங்கனேசிவனேபோற்றி. 11

ஞானநாட்டக்கனல்குநம்பனேசபர்த்தியென்று, வானமாஞ்சடிலர்போற்றிவளரொளியுருவாபோற்றி, யானமாலயனைர்சென்னியலங்கலாய்போற்றிகொன்றைத், தேனலர்தொடையாய்தேசுவிடங்கனேசிவனேபோற்றி. 12

சம்புவேபோற்றிசூலக்கடக்கையாய்போற்றிதன்னை, நம்புவோர்க்கருள்வாய்போற்றிநன்றிகொள்விசையாபோற்றி, யம்புயாதனைச்சுட்டவடலைத்தரித்தாய்போற்றி, சிப்புளானவனேதேசுவிடங்கனேசிவனேபோற்றி. 13

ஆகியுருவுமீறுமன்றிநின்றவனேபோற்றி, போதியாவுருவபோற்றிபெரியமுக்கொழிலாய்போற்றி, சாதியாம்வேதாந்தத்துத்தக்கவப்பொருளேபோற்றி, சேதவான்மதியாய்தேசவிடங்கனேசிவனேபோற்றி. 14

திருவொழுக்கன்சினுள்ளேதிகழ்கருமுருகாபோற்றி, பெருவடமேருவிற்கைப்பிஞ்ஞகாபோற்றிவேதா, வரிமுகலமரர்போற்றுமதிநிமுதல்வாபோற்றி, திருவளாளைத்தேசவிடங்கனேசிவனேபோற்றி. 15

மேலவர்மேலாபோற்றிமிதவாமருள்வாய்போற்றி, சீலமாரிடற்றாய்போற்றிநீபனைப்பெற்றாய்போற்றி, பாலுறுமடியார்துன்பமாற்றிறக்கிடைப்பாய்போற்றி, சீலநான்மறையாய்தேசுவிடங்கனேசிவனேபோற்றி. 16

முப்புரமெரித்தாய்போற்றிமுந்துதற்புருடாபோற்றி, மை
ப்படைமழுவாபோற்றிவானவர்புராணபோற்றி, யிப்புவனங்களி
னருளிடதத்துறையிறைவாபோற்றி, செப்புமுக்கிரனேதேசுவிட
ங்கனேசிவனேபோற்றி. 17

சாந்தமாமுருவபோற்றிதவத்துறைத்தலைவாபோற்றி, மாந்
தளிருறைவாள்கண்ணல்வளைக்கவின்மாறற்செற்றே, வாய்ந்தரு
ண்முனிவர்காத்தெம்மன்னையையணந்தாய்போற்றி, சேந்தனைற்
போற்றுந்தேசுவிடங்கனேசிவனேபோற்றி. 18

ஆற்றல்வாட்டடக்கைப்பொல்லாவசுரர்களமுனைதவாங்க,
நாற்றிசைவாயிலெங்குநண்ணிஞெரென்னின்மாவை, யேற்றவர்தே
வர்யாருமேற்றெதிர்மலையமாட்டார், நீற்றொளியமுதாநின்றுணை
யல்லாற்பிறிதொன்றுண்டோ. 19

பசுபதிநீயேமற்றைப்பசுக்களன்மாயனெங்கட், கசுபம்வந்து
ற்றாற்றீர்ப்பதாரெமையாண்டகோவே, நிசிதசித்தாந்தவெண்ண
நிறையருள்சுரந்தாணீண்ட, திண்சயிலசபாவுஞ்செல்வத்திருத்த
வத்துறையெந்தேவே. 20

அஞ்சல்மாமுனிவீர்பொல்லாவசுரராற்பயமொன்றில்லை, வ
ஞ்சாயால்நானகுசத்திவகுத்தடல்கொள்வோமீயே, பஞ்சவக்
கரஞ்செபித்துப்பற்றுடனிவணீவாழ்வாய், தஞ்சமாநதியினாலு
ந்தவத்துறைவாசத்தாலும். 21

வந்துனக்கருள்செய்கின்றேம்வாழுமித்தலத்துவாச, முந்
தியபிறப்புக்கோறுமுற்றியதவத்தோர்க்கல்லாற், சிந்தையினி
னைக்கலாமோதிரிதினத்தசுரர்தம்மை, நந்திடச்செய்வோமிங்க
ணிறந்தலாறனைகலைசேர்வார். 22

பராக்குபகரிக்குஞ்செவ்விப்பராசரபறுமேளார்க்கும், வ்
ரைக்குறுமனமும்வாக்குவேறதாய்வாழுமயாந்த, ரிரக்கமுமன்பு
முள்ளாரித்தலத்தியாவரேனுங், கரக்குறுமுடலம்விட்டான்மு
த்தியிற்கலப்பர்தாமே. 23

வரைநிகராதுவான்மேசாலைபோல்வழங்குவோன்வறியோன், றெரிந்திடாமுழுமூடனுந்திருத்தவத்துறையி, லிருந்துளாரெனிற்றலைமைப்பொருப்பினிலிருப்பார், பரிந்துகாலமூன்றுணர்ந்தவரப்பதிபதிவார். 24

மூதறிவுடையோர்பெரியர்கடமுறமேவமுயன்றிடவேண்டுமம்முயற்சி, பேதமைநீக்கும்பெருமையையாக்கும்பெரியதம்பகையெனிலதுவும், போதமேயுதவும்மேன்மைதத்தானும்புந்தியோர்தொடர்ச்சியேவேண்டுஞ், சாதியாஞ்சந்தமரிதருவாஞ்சாந்தனுறிடும்பகைத்தானும். 25

அவ்வணம்போலவர்பெரும்பகைகொண்டார்ப்புறவந்தவிவ்வசுர, ரிவ்வருங்காலத்திலையாவர் தடக்குமெய்யருத்திருத்தவத்துறையிற், கன்னைமேருவுடலங்கழித்தவாற்கயிலைகாண்குவர்காலநீண்டிருந்தா, லவ்வண்டைகெடுநாள்பரன்றயரின்மேறவத்தருள்புரிவனென்றனை. 26

என்றிறையருளிப்பாகத்திலிருந்தருள் பெருந்திருவாட்டி, தன்றிருமுகம்பார்த்தருளவுந்தாயுந்தழுதண்வெங்காளிநாலவரையே, யன்றுவணுக்கயலோர்ந்தகாளியளவிலார்தங்களையேவி, வென்றிடவிடுப்பப்போந்தனர்கொடிகள்மிடைந்திடமுரசொலிமிகைப்ப 27

வாளொடுபலகையெழுப்புத்தண்டம்வச்சிரந்தச்சுறுங்களைகள், நீளுறுங்கொடுவில்நேமிதோமரங்கள்நிரைத்தனர்நிரைத்துமாற்றலர்மேற், றுமொடுங்கரங்கள்சிரமுரங்கண்டஞ்சந்துகள்சிந்திணரசுரர், காளிகள்பொருதாரரங்கரித்தந்தக்கள்வர்கள்கலங்குறக்கடிந்த. 28

ஏகமாகாளிசயந்தியற்தனிசூரிருஞ்சண்டகாதினியென்ன, வாகைகொள்பத்திநால்வருமங்ஙணதுவானவர்வானின்மேற்காணப், பாதுறுங்கரியைப்பரியினைத்தேரைப்பதாதியையொன்றோடொன்றடித்துச், சீகரச்சீதக்கடல்கடைந்தென்னத்திகாந்தங்கள்சிதறிடச்செறுத்தார் 29

கண்டனரந்தத்தண்டகன்முதலோர்காலத்தைவெல்பவர் யாரே, புண்டிடுங்கருமமுண்டிடவேண்டுமொழிந்திடவரிதென வோதிச், சண்டவெங்காளிபாதிகள்செயலைத்தனித்தனிநோக் கியுட்டளர்வு, கொண்டனர்பின்னும்பின்றிடுமசுரர்சொலைக்கள த்தமர்செயக்குறித்தார். 30

பராசரன் பூசித்த வத்தியாயமுற்றும்.

ஆகசெய்யுள் (686)

---

## 17-வது மகாகாளிதண்டகன் முதலசுரரைச் சம்கரித்த வத்தியாயம்.

இருவகைச்சேனையுமெதிர்ந்துபோர்செய,
வெருவினரசுரர்கள்மெய்கள்சிந்தினர்,
பெருமைகள்பிடைந்தனவிசைகள்கண்டனன்,
கருநிறத்தண்டகன்கடியவுள்ளத்தான். 1

குறிப்பொடுந்தண்டகாசுரன்கூறுங்கூற்றுவனிவ்வுருக்கொ ண்டே, செறுத்திடவந்தசெயலெனநினைந்துசேனைகள்யாவையு ங்கொன்ற, விறற்பெருங்காளிசெயற்சமரினையும்வினையத்தால் வெல்குவமென்றே, கறுத்திடுமுளத்தன்றருகற்செற்றகன்னி யைநோக்கியீதுரைப்பான். 2

அடல்செய்மாகாளியுனையிமைப்பொழுதினடல்கொள்வ னெனவவனுரைப்ப, படர்தருசேனைத்தண்டகன்முன்னர்ப்பகரு வாள்பயங்கொளவுரைத்தாய், நடலைகொணெஞ்சைப்பிளந்துன துயிரைநடுவனுற்பிணிப்புறநயந்துன், னுடலிடைக்குருதிக்கடலி னென்கைவாளுரமுறத்தோய்த்துமென்றாள். 3

பின்னுமொன்றுரைப்பாளெள்ளளவாய்நின்பேருடல்சிரமு ரங்கரங்கள், பன்னியகழுகுபருந்துணவிருந்தாய்வழங்குவனம ரர்கள்காண்பார்,என்னுடைவலியுநின்னுடைவலியுமென்றனளெ ன்றலுமெதிர்த்தான், தன்னிகர்பிறுபிரமடற்றந்தித்தடவலியு டையதண்டகனே. 4

விண்டொடநிமிர்ந்த தண்டமொன்றடலின்வில்லுருவெடுத்
தெனவிளங்கிக், கண்டவர்நடுங்கக்கனகப்பூண்பிடித்துக் கணித்தி
டினாறெனும்பாரங், கொண்டதையுலகங்குலைந்திடச்சுற்றிக்கொ
ற்றமுங்கூறியேவிடுத்தா, னண்டமுநடுங்கக்கனலுருவென்னவரு
தலுங்காளியாங்கரிந்தாள். 5

தன்றடக்கையிற்றற்சனிவிரலாற்றள்ளினனுண்டுகளாகிப்,
பொன்றினததனைத்தண்டகன்கண்டேபொறாமையானாறாகிங்
கிணிகள், வென்றிகொண்டணிந்தவிறற்பெருஞ்சுவந்தம்விட்டன
ன்மந்திரவித்தியாற், சென்றதுதூரமைகொண்டனனென்றுசெப்பு
வாணிப்பெருஞ்சூலம். 6

நளினமீதுறைமோனக்கியதிதனைநாடியேயிலக்குகவிலையே,
வெளிதினிலடர்க்குமென்றனனுன்மையியம்பினேனென்னவுமி
சைத்தான், றளிவிடங்கனல்கான்றெதிர்வருஞ்சூலந்துண்ணெ
னக்காளிமார்புறலு, முனிவுறப்பிடித்திட்டெறிந்தெழுங்கோப
முயற்சியால்முடுகியேநடந்தாள். 7

கடந்திடுங்கங்கைசெங்காலொன்றனனுகிய தண்டகன்மார்
பிற், குடைந்திடுங்குலிசக்கிரிமிசைவீழுங்கொள்கையிற்குத்த
லுங்குருதி, படர்ந்தெழவுடலம்பதைந்திடவிறந்தான்படிவம்விட்
டனன்பரமேயாகர், கடந்திடுமுலைகவிடுதல்போலுயிரைக்காலன்
வன்றூதர்கைக்கொண்டார். 8

மைக்கிரிவிழல்போலசுரன்வீழ்ந்திடலும்வானவர்காளிமேல்
மலர்க, டொக்குறவிறைத்தாரக்கணத்தசுரர்சுற்றுறுபடைபொ
டுந்துவன்ற, மிக்கதோர்கங்கையாதியர்நன்னீர்மூடியவியலுலகெ
ன்னச், செக்கரையதிநிமுழக்கிடுஞ்சமரிர்தெளித்திடுமசுரரோ
டெதிர்ந்தாள். 9

பெருந்திருவாளன்பெருந்திருவாட்டிபிறங்கடியுளங்கொடு
சேர்ந்து, திருந்துதஞ்சேனைதன்னொடும்போந்துதிசைதிகைப்புற
முரசறைந்து, பருந்தொடுகாகம்பறந்தலைபோர்ப்பப்படைக்கல
விதமெலாம்பரித்தே, கருந்தலையசுரருரங்கரமுருளக்கடையுகக்
கடலெனப்பொருதாள். 10

பேரமர்விளைப்பவாற்றலராகிப்பின்னிடத்தன்னடற்படைக ள், வீரனங்கெதிர்ந்துவிச்சுவாகனன்முன் விதித்ததோர்பெருந் தடிநூறு, பாரமதுருக்கினுருவுடையதனைப்பற்றியேயகடங்கெதிர் செயந்தீ, சீரினுர்பட்டநெற்றியிலேற்றத்திசைத்திலளசைந்தில ணசைத்தாள். 11

பெருங்கயத்துயர்ந்தமத்தகத்தெரிந்தபெரும்புலினங்குசப் பெற்றி, தருங்கதைவீழத்தனதிருகண்ணுந்தழலெழச்சயந்தி தன்கையிற், பொருந்திறங்கூலமிருந்ததைநோக்கிப்புலையனதுயி ர்குடித்தேகென்,றருந்திறலோடும்விடுத்திடவெழுந்ததாலமோட முழுமிழ்ந்தம்மா. 12

அங்கண்மாஞாலமுழுவதுமசைத்திட்டாழியுமவனியுமஞ்ச மங்குல்வானிறைந்துவருதலும்வீரன்மற்றொருசூலமோற்றெறிய, நங்கைசெஞ்சூலநொடியங்கதனைநாலிருதுண்டமாய்த்தடிந்து, சி ங்கமாம்வீரன்றுங்கமார்புக்குச்செகுத்துயிர்குடித்தெழுந்தது வே. 13

சோரியுமூனுமுயிரொடுமுண்டுசுடரொழுநெடியமூவிலைவே ல், பேரிருளகற்றுமிரவிபோற்பிறங்கிப்பெருந்திசைமுழ்கியேமீ ண்டு, சீரிவசெயந்திசெங்கரமலரிற்சேர்ந்ததுசெயசெயவென்றே, மாரியின்மலர்கள்வானவர்சொரிந்துவாழ்த்தினர்வாகைகொண் டவள்மேல். 14

இவ்வணம்பூசல்விளைநதலும்சூரரிறந்துமேகமாகாளிசெவ்வி யசெயந்திசெயங்கொண்டதிறனுஞ்சிந்தனை செய்துவஞ்சகனும், வெவ்வலியுடைத்தேவாந்தகன்றனுமிகும்படையினனிடமுன்னி ட், டவ்வடற்களத்திற்போந்தனர்முரசமறைந்தனரார்த்தன ரெதிர்ந்தார். 15

இகப்பகையசுரரிறந்தனரின்றென்றியம்பியேசண்டகாதி னியு, மிகுவிறலசுரமர்த்தனியோடும்வெங்கனல்கண்கள்கான்றே சிப், பகைகள்பாறியதெனறமரர்களுரைப்பப்பரிகரிபதாதியோ டிரதஞ், சகமிசையுருளவடர்த்திருதகுவர்தலையையும்வாளினுற் றடிந்தார். 16

வேறு

வஞ்சகன்றேவாந்தகன்மடிந்துவான்களத்,
துஞ்சிலரிலையெனவுறத்துச்சீறியே,
பஞ்சசாலத்தினிற்பற்றுந்தீயெனத்,
துஞ்சிடவசுரரைத்தொலைத்திட்டார்களே. 17

எதிர்ந்தவரியாவருமிறந்துபின்செயத்,
திர்ந்தெழுகொக்கரையார்த்துக்காளிகள்,
பொருந்திடப்பெருங்களநீங்கிப்போந்தனர்,
முதிர்ந்தவேதாந்தத்துமுதல்விமுன்னரே. 18

வந்தனர்பெருந்திருமலர்ப்பதங்களிற்
சொந்தனர்மலர்கடீய்க்கும்பிட்டேத்தினார்,
சுந்தரியவர்முகநோக்கித்தோகைமீர்,
நந்திருநகரினுற்றிசையுநண்ணியே. 19

இருந்துறுங்காளிகளோடுமின்னகர்,
பரிந்துகாத்துமதடியரவுவார்க்கெலாம்,
பொருந்திடநன்மைகள்புரியுமென்றனு,
மருந்துதிபுகன்றனரமலைமுன்னரே. 20

சூழ்ந்தனர்பணிந்தனர்சுயம்புவோடுறை,
யேந்திழைபதங்களையேத்தியன்னசர்,
வாழ்ந்தனரடியர்க்குவரங்கணல்கியே,
வீழ்ந்திடாதுலகெலாம்புறக்கும்வெற்றியார். 21

மாகாளி தண்டகன் முதலசுரரை சம்கரித்த வத்தியாயம்

சருக்கம் முற்றும். (ஆகச்செய்யுள் 707).

## 18-வது தருமசன்மா முதலாயினோர் சாபந்தீர்த்த வத்தியாயம்.

எனச்சனற்குமாரன்வந்திறைஞ்சியெந்தையை,
மனத்தினிற்றரித்துமுன்வகுத்தகாதையொன்றுநீ,
முனற்புதத்தொடுஞ்சொனாய்முறைமையாதுயாவரே,
நினைப்பவத்தலத்தைமுன்னிகழ்த்தினோர்கள்யாவரே. 1

என்னநந்திநாயகனியம்புவான்மயங்கிடா,
தன்னநீடுவாவிசூழ்ந்தமர்ந்தகொங்கர்தேசமாம்,
பொன்னிநாடதன்கணேபொருந்துதன்மசாலையா,
நன்னர்கண்மேவுதநாதநாளுநாளுமல்குமால். 2

இயமுநியமமுமிலங்கியாகுநீதியு,
நயமுமுள்ளபூசுரர்கணயந்துவாழுநன்னகர்,
செயமுறுங்குராசநீதிசீரின்மல்குசெல்வமாய்,
பயமதின்றிவாழுமப்பதிக்கணீதிபற்றினோன். 3

வேறு

இச்சையின்மேவியவெச்சன்மாவெனுமிற்பயில்மாமறையோன்,
முச்சகமாதியமெச்சிடவாழ்பவன்முப்பொழுதாயகட,
னிச்சயமாகவியற்றிடுவேதநிதிக்குலசேகரன்வா,
னச்சுரனோர்பவனுக்கொருசேயுளனற்புதரூபமுளான். 4

தருமசன்மாவெனுமொருவன்முன்னூல்வினைதழுவினநாவாரச்,
சுருதிகளோதினன்மிருதிகளாதியதுகளறவேயறிவான்,
குரவனைமாமகிழ்வுறநிதியாகியகுறைவறவேயுதவி,
மருமரலால்முனமுதவினர்தாண்மலர்மனமுறவேபணியா. 5

வேறு

நின்றவன்றனையன்றுதந்தைநிரம்புரூபமெலா,
மொன்றநாடினன்மன்றல்காலமிதென்றேயோர்வுறுவான்,
சென்றுகானிடைத்துன்றினோரொடுஞ்செந்தியுந்துசமித்தைக,
னின்றுதாவெனவன்றுபோயினனின்பநண்பரோடேகியே 6

மண்டுநீருணமாலுதாரனைவளர்ந்தசெஞ்சடையான்,
கொண்டவைகனசத்துமாமுனிகுண்டிகைக்கரமோ,
டண்டராதவனத்தெதிர்ந்தனனங்கவன்றன்னையே,
கண்டுளாரொடுநின்றதன்மகன்மாநகைத்தனனே. 7

உடலமெங்கணுநிறைகொள்ரோமமுமுகிர்வளர்ந்தகையோ
டடவியின்கணேயெதிர்வரும்பொழுதிலைகையிங்கிதென,
விடலைநண்பினரொடுமகிழ்ந்தனன்மிகவுநிந்தைசெயா,
படிசெறிந்திடுமுருள்கல்கொண்டெதிர்படவெறிந்தனனே. 8

எறிதருஞ்சிலைப்படவெதிர்ந்திடமுனியியம்பினான்,
மறையினங்குலமுதன்மைகொண்டுயர்மதலையானவரே,
செறிகருங்கலினெறியலென்றசொல்செவிநுழைந்திலராய்க்,
குறிகொடங்கவரெறியநின்றிடுமுனிதுலைந்தனனே. 9

வேறு

அமமுனிநகைத்துநம்மையிகழ்வுற்றீர்
வம்பினைதுபெற்றீர்மம்மர்மயலுற்றீர் 10

கற்கொடுபுடைத்தீர்மற்கடநிகர்த்தீர்
சொற்படிறகத்தீர்நற்கதிதுடைத்தீர். 11

வேறு

என்றிவையிதம்பலவிசைத்துமாமுனி
கன்றியவுளத்தொடுங்கல்லிற்றுக்கலாற்,
றுன்றியகற்களாஞ்சொரூபஞ்சூழ்ந்திவ,
ணின்றிடுவீரெனநிகழ்த்தநின்றிலார். 12

வீழ்ந்தனரடிமிசைமெய்நடுங்கினை,
மாழ்ந்தனர்துன்பிடையஞ்சியஞ்சியே,
சூழ்ந்திடுவினையிமேனருசுருதியந்தண,
வாழ்த்திநின்பெருமையாற்சிறுமைமாற்றுவாய். 13

## வேறு

வெளிற்றறிவுடைய சிறியரேனைப் பிழையினை வேரறுத்தாட் கொளவேண்டுங், களிற்றினை விடத்தைகக் கடக்கலாப பிரமக்கருத் தினைநுரைத்திடுஞ்சாப, வெற்றினிலெழுந்தவென்றியார்கட்பாரஞ் சினையஞ்சலெனறருள்வாய், துளித்திடுங்கருணைமேகமேயென றுதித்தனர்வினைவிரதுடர்பால. 14

விஞ்சுநல்லறிவீரங்கிவேட்டுயர்ந்தவொண்டிருநீறணிவேதப், புஞ்சமாமறையோர்தமைப்புராந்தகனைப்புந்தியானினைந்தனை புரி வோர், துஞ்சவர்கடிதுகிரயமாங்கவற்றைச்சூழ்ந்திடுமாதலாற்றூ யோர், நெஞ்சினினினையார்சிவனையந்தணரைநிந்தனை நினைத்தவர் தமையே. 15

ஒருபொருட்பரமுமுருத்திரக்கடவுளொருவமோ தந்தணரென்னத், திருமறைபுகலுநதெய்வமாமறையோனசிவனென்றமிழையை யறிந்தோர்கள், பெருமையாரறிவார்மாலவன் பிறப்போறுமந்த ணறைமேயமேனுங், குருபதிச்சடிலக்கூத்தனதுருவாய்க்கூறிடு மறையெனக்கூறிந்தே. 16

இயமநியமவியல்புமற்றவர்க்கேயியற்கையதாகுமாங்க தனு ற், றயவினர்வெண்ணீற்றந்தணர்மேவர்தவமுனிவோர்கடென் புலத்தோர், நயமொடுமுவப்பவருக்கியமங்சணல்கியேமறைநெறி நடாத்திப், பயமுமெய்யனபுமபடைத்துயர்நதோர்கள்பனவரே யன்றிமற்றெவரே. 17

மாற்றருங்காமவெகுளிபொய்மயக்கவலைகடந்தவருமந்தண ரே, சாற்றருநதெய்வஞ்சதுர்மறையிருக்குஞ்சாரக்கறைபவருளம மமா. போற்றருப்பெருமையந்தணர்பெருமையென்றனன்புண் டரிகத்தோ, னூற்றிருமுகத்துமென்றனன்கைலைநாதனேபரமெ னுஞ்சூதன். 18

பினனுமீதுரைப்பானந்தநான்மறையோர்பிள்ளைகளுள் ள மேற்பகைதப்புப், வன்னிநேர்கோபந்தனனுளத்தெழுந்தவன்மை யுங்கண்டுமாலுற்றுன, பன்னுவானந்தோபழிகஙினுங்கடியபற்றி னுமெற்றினுமறையின, மன்னியகுலத்தோரெனறெண்ணெழுந் தகோபத்தாற்சாபத்தைவகுத்தோம். 19

இன்றளவேற்றதவமெலாமிழந்தோமினியொருபலமியற்றா
தலாற், றான்றினார்பவத்திலெனவுளத்தெண்ணிச்செல்லுவாரை
சுருதியந்தணரே, குன்றிடுஞ்சாபநீக்கிடாதெங்குங்குறுகுமின்
குவலயந்தனிற், றென்றலங்கன்றுமன்றல்கொண்டுலவுதெருத்
திகழ்திருத்தவத்துறையில். 20

அந்ததிருநகரத்தலாய்பொன்னியலைபெறிவடகரைக்கமரு
ஞ், சித்திரைமேடோறுந்திடுஞ்செல்வச்சிவபுரத்திருநகரதுவே, ச
த்தியோடாலந்துறையிறைவாழுந்தனனிசரபினின்மேல்பான்,
முத்திதானருளுந்திருநகர்மூன்றாகுடிசையினவென்மொழி
வார். 21

ஐப்புலனடக்குநான்மறைநீதிப்பராசரசேத்திரமென்றா,
மிம்பரினிசைப்பராப்பராசரனெரியற்றியவழுதலிங்கமுமப், பைம்
பொனுலையத்துட்டெட்புறமருவும்பார்வதிசோலிலைமேல்பா,
லும்பர்மாமுனிவருரகர்மானிடர்வாழ்த்துயர்சிவகங்கைபொரன்
றுளதால். 22

உள்ளமீதுள்ளுமனைவியெலாமுதவுமுவப்பிலாவாயுளுஞ்செ
ல்வந், தெள்ளுறவாழ்வுமின்மையேயுதவுமெப்பொருட்பாவமும்
போக்குந், தெள்ளுநீர்த்திவலையொன்றதிற்பருகிற்றென்கடலு
டுத்தபூவுலகிற், கொள்ளுநீர்த்தீர்த்தமியாவையுமாடிக்குலவிய
பேறடைகுவரால் 23

அயரர்போற்றந்தத்தபரநீர்த்தடத்திலாடுவிரவனதானத்
தை, நமரென்வறிமோர்க்கோர்பொழுதேனுநல்குவீர்நன்மையு
ணண்மை, மெய்யர்களாமேலத்தற்கிசையுமோனமேனதானத்தினியல்
பந்தவிடத்திற், றிமிரநீர்க்கங்கிகாரியஞ்செய்தென்புலத்தற்குச்
செயவொன்றுகோடி. 24

அனுவளவெனிக்கிற்சோடியேநிகர்குமாடசமுதலிய தான,
பணிதிகழுந்தச்சிவகங்கையாடிமாற்றமிச்சாபதனைதயெனலுந்,
தணிவுறப்பணிந்துபோயினார்பொலிசித்தடங்கரைவிடங்கர்தம்
பாகத், துணையொடுமமரர்போற்றவீற்றிருக்குஞ்சுந்தரத்திரு
த்தவத்துறையில். 25

மறைநெறிவளர்ப்போர்வாள்வலியுடையோர்மறையவரிறை
யவர்நிலையு, நிறைவாதுதனிற்றோற்றலர்பொருதோளரொரு
பொருள்சிவனெனவுணர்வார், பொறைமிகுதிகல்விதேசருள்விடங்
கற்போற்றிபெற்றோரெண்ணீ, றறுதொடணிவோர்மறை
தழங்குமன்னரருங்குடிநெருங்குமன்னகரம். 32

நவமணிக்குவையுநிதிபொருந்துதனல்வழிமுறைமையாற்
றேடிச், சிவனடியவர்க்குந்திருமறையவர்க்குந்தினந்தொறுந்தெ
விட்டிடாளிப்போர், தவமெலாந்தருமநீறெண்ணியோர்சாந்த
முந்தருமமுமுடையோ, ருவமிலாவுவைய துலவிசுத்தர்களாமுய
ர்குலவணிகர்வாழ்நகரம், 33

முன்னவர்பணிக்குநன்மொழிவழுவாமுறைமையோர்நழுவி
ஞான்முதிர்ந்தோர், செனனமற்றருமநெறிதழ்வுறவளர்ப்போர்சிவ
னடியாரடித்திறத்தோர், பண்ணிருமதியும்பயிர்செழும்பண்
போர்பரன்றிருநீறணிபரித்தோர், பின்னவர்கைலேமுன்னவர்
போற்றும்பெற்றியோர்துற்றுவாணகரம். 34

நாற்பெருங்குடியினிதியும்பொறையுநன்மையுந்தருமமுந்தி
ருவு, மேற்படுவோர்நகரமிப்பற்றிநான்முகத்தோனிருத்தியதென்ன
வேயிலங்கு, மாற்பயற்கபரர்க்கருமுனிவோர்க்குமல்வினைக்கி
டைந்துவந்தோர்க்கும், பார்ப்பதியோடுபரமர்வீற்றிருந்துபரிந்
தருள்பரிவதப்பதியே. 35

பங்கயமலரிற்கண்படுமபணிலப்பள்ளநீர்ப்பழனங்கடோறு,
மங்குறைமாந்தருங்கொடைக்கஞ்சிபழைத்துவாழ்வித்தவா
போற்றிப், பொங்குநீரிடதசோர்தாளமிசைப்பதுமநிதித்தவைபுரி
ந்திடல்போலுஞ், சங்கமாநிதியப்பங்கயத்தழலிறவம்புரிந்து
றைவபோற்றயங்கும். 36

வேறு

திருவளர்சுருதியுநதெய்வமங்கல
மருமகத்தமரரையழைக்குமார்ப்புமு,
விருவகைச்சாத்திரமிபம்புமோதையு
மிரைதருமந்தணரிருக்கையெங்குமே. 37

ஒருவனைபணித்தியத்திருவிழாவொலியும்
பொருவின்மங்கலமென்கணும்பொருந்திடுமொலியும்,
வரிவிழிசதிருநகைசயராடத்தொலியும்
பெருகுமின்னிசையொலியொடுமலிவுறப்பெருகும் 38

ஆறிலொன்றரசருக்களித்திட்டடைந்தையு
நீறணிதேவுக்குநிலவுதென்புலத்,
தேறியபிதிர்கட்குர்விருந்துக்கொக்கற்கும்
பேறுதற்காக்குறுங்குடிபிறங்குமால். 39

சோதியாலயநன்மணிவிளக்கமுஞ்சுருதி
யாதியந்தணருஞ்சுசிவிளக்கமும்மரங்கின்,
மீதருளிகைவியன்மணிவிளக்கமும்விரவிப்
பாதிஞளிரவெண்பதங்கிலைப்பதிக்கே. 40

வேறு

தபவுமன்புமிதுகணபுமிமைபந்தோர்சந்ததம்பயிலுமிந்தந
கர்க்கண், ணிபமுழங்குதிருவீதிகள்கண்டாரிந்தயானகரமெங்
கைதபிரானார், கயமுகாசூரனைவென்றிடுதந்திகந்தனைந்திகணமோ
டமர்கின்ற, செபமுறுங்கனகவாலயமுன்னர்ச்சிந்தையன்பினொ
டுசென்றுபணிந்தார். 41

தேவிபாகசிவதேசுவிடங்கதேவதேவதிருவாளசுகந்தப்,
பூவினாரிதழிமார்பபுயங்காபரணாகைலாபரணவென்றே, நாவினா
லமார்மாமுனிவோர்கணம்புதொண்டர்துதியம்பியுவாகி, மாவிரு
ந்துவிளையாடியவாசற்கோபுரத்தினிடைவந்துபணிந்தார். 42

மங்கைபாகர்மதிசூடியவேதமாலயற்குமறியார்மகிழ்கோயி,
லங்கோர்சார்பினமருஞ்சிவகங்கையமரர்மாமுனிவர்தமரமிகுந்
தே, பொங்குமன்பினோடுவகண்டப்பொற்றடத்தைநணுகிப்
பணிவுற்றே, பெங்கணேப்பினைகளிங்கநல்வித்தோவென்றுபாடி
னரகளாடினரின்பால் 43

மனமற்றவருளமலமற்றலர்மிடைதவர்வாய்தல்,
பனவக்குலவர்கள்பணிவுற்றியல்மறைபரவுற்றே,
வினையற்புதவருளடியைப்பரவியகன்றப்பாற்,
றினையொப்பருமொருமுருகற்றொழுதனர்தவமுற்றார். 51

தண்டிப்பெருமான்றண்டைச்சரணந்தாழ்வுற்றே
யண்டர்க்கரியானைமன்றற்கோயிலகத்துள்ள,
தொண்டத்தொகையோர்கண்டுற்றிடவேசூழ்வுற்றப்,
பண்டைப்படியோர்சென்றப்புறம்வாழ்பதியுற்றார் 52

அம்பிகாபதியயராருக்கதிசமுற்றதுபோற்,
செம்பொனார்திருத்தவத்துறைசெகதலதிலக,
நம்பினார்க்கருள்சிவகங்கைத்தீர்த்தநாயகமாஞ்,
சம்புவாழ்கதித்தலத்தன்னதானமேதானம். 53

திகடருங்கையிலச்செல்வன்காசியில்,
மிகுபலமன்னதானத்துகேவிலைச்,
சகமகிழ்கெயவடவிருக்கச்சாயையிலக்,
தொகுமன்னதானமேலில்லை சொல்லவே. 54

இவையலாற்கரையெறிந்தேதற்றிச்சந்ததிற்,
குவையெலாமொழுகுபொன்முகரிக்கோட்டின்மேற்,
சிவமெலாமுடையவன்சிவனமர்ந்தரு.
ளுவமிலாத்தென்கைலாயத்தோங்கலில். 55

வேறு

ஏகம்பத்திறைவனருளுமையோடிருந்தாசியற்றுசீர்க்காஞ்சி, பாகம்பெற்றவளோடிருந்தருளருணைப்பருப்பதம்பழமலை தில்லை, மாகும்பகோணமவெதிரிகாச்சிரமம்பஞ்சமானதிலையை மதுரை, நாகபொற்பணியாமணிந்தவனுடல்நயந்தருள்வடவனநண்ணி. 56

ஞானவேதியர்கள்கோடிபேர்க்கன்னநல்கியபலனிதுமதிகம், கூனல்வெண்மதியந்தவழ்ந்தநீர்ச்சடிலக்கூத்தனம்பிகையொடுங்குலவும், பானல்வாய்விட்டஞ்சிறைத்தும்பிபடர்ந்திசைதிருத்தவத்துறையிற், றூனமாமொருவர்க்கன்னமிட்டதற்குச்சமனுறுததிகமாந்தவத்தீர். 57

தெளிசிவகங்கைதீரத்தினல்லாற்றிரைகொள் காயத்திரி தீரத், தளிசோலைபயிலைசயாள் திருமுனைத்தந்தையிரவிப்பரிடத் தன்பா, லெளியராய்வந்தநெந்தணர்க்கலைமிடுபவர்யானையும டைவார், களிகொளக்காயத்திரிநதிக்கரையிற்சாரியங்கடவுள் முன்னுக. 58

அப்பொருஞ்சாத்தனடற்சணத்தோடுமருளோடுமன்னவர்க் குறைவா, ளெட்டிலாக்கடவுளிபமையேவேண்டலுதவிடுநினை த்தனவையெலாந், தப்பிலாதுறைதகோமறைச்சதுமுகத்தோ ன்றந்தகாயத்திரிநதியி, னப்பினிலொடியையனைவணங்கியவன்மு னமனக்கொடுத்திருக. 59

சச்சிதானந்தத்தச்சிவகங்கைத்தடங்கரையிடத்தன்னதா னை, முச்சமுழுமொருகுடைநிழற்றமுழுமணிதுயிற்றியமகு ட, மிச்சையிற்றுங்கியேற்றடலரியேறந்தினப்பூந்தவிசேறி, யச் சிரத்தேகத்தொடுபபுவிபுரக்கவைத்திடுநிச்சயமாமால். 60

புனிதநீர்சிவகங்கையங்கரையிலிட்புராண, மினிதிஞேதிட க்கேட்பவர்க்கப்பலனிலையையும், வனிதைபாகனுக்கன்பனுய்மண் டலாதிபனுய்த், தனதனுமெனவிருந்துபினசிவபதஞ்சார்வா ன். 61

தருமசன்மா முதலோர் சாபந்தீர்த்த சருக்கம் முற்றும்.

ஆகச் சருக்கம் 18க்கு செய்யுள் 768.






Printed at the Wednesday Review Press, Trichinopoly.